marxist.tncpim.org 999 477 6471

மே 2019, விலை ரூ.15.00

# மார்க்சிஸ்ட்

தத்துவார்த்த மாத இதழ்

2018 ஜனவரி முதல் ஒலி இதழாகவும் வெளியாகிறது



# ஏகாதிபத்திய எதிர்ப்பில் உழைக்கும் வர்க்கம்

இந்தியாவில் தொழிலாளர் வர்க்க இயக்கங்கள், தங்கள் பிரச்சனைகளை கையிலெடுப்பதில் மென்மேலும் பக்குவமடைவதோடு, விவசாயிகளின் போராட்டங்களோடு இணைந்து கொள்கின்றன என்பது தற்போதைய இயக்கங்களின் குறிப்பிடத்தக்க அம்சமாகும்.

இட ஒதுக்கீடு: சிபிஐ (எம்) அணுகுமுறை !

மீண்டு வருமா வெனிசுவேலா?

# மார்க்சிஸ்ட் தத்துவார்த்த மாத இதழ்

## இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்)

தமிழாக்கம் - *மின்னூல்*

வெளியீடு : *FreeTamilEbooks.com*

# பொருளடக்கம்

# 1. ஏகாதிபத்திய தாக்குதலும் உழைக்கும் வர்க்க எதிர்ப்பும்

*ஏ. ஆர். சிந்து*

*தமிழில்: ஜி.பாலசந்திரன்*

உலகெங்கிலும் உள்ள தொழிலாளி வர்க்கம், வாழ்வின் நாள்தோறுமான மூலதனத்தின் தாக்குதலையும், அரசியல் ரீதியான ஏகாதிபத்திய தாக்குதலையும் தீவிரமான வர்க்க போராட்டத் தால் எதிர்கொண்ட வளமான அனுபவத்துடன் இந்த மே தினத்தை – சர்வதேச தொழிலாளர் தினத்தை – மிகுந்த உற்சாகத்துடனும், வர்க்க பெருமிதத்துடனும் கொண்டாடியிருக்கிறது.

## *ஏகாதிபத்திய தாக்குதலும், உலகளாவிய எதிர்ப்பும்*

*முதலாளித்துவ அமைப்பின் நெருக்கடியின் பின்புலத்தில், சிஐடியு 2018 நவம்பரிலேயே கீழ்வருமாறு குறித்துவைத்தது*

*"அரசியல், பொருளாதார, மற்றும் ராணுவ முனைகள் என அனைத்திலும் ஏகாதிபத்தியத்திய சக்திகளின் மேலாதிக்க தலையீடு அதிகமான ஆக்கிரமிப்பு பரிமாணத்தை அடைந்துள்ளது. வளரும் நாடுகளின் சந்தையையும், இயற்கை வளங்கள் அதிகமான பகுதிகளையும் தனது மேலாதிக்கத்தின் கீழ் தக்க வைத்து, விரிவுபடுத் துவதே அதன் நோக்கம். மிகவும் குறைவாக இருப்பினும், ஏகாதிபத்திய சக்திகளுக்கு இடை யேயான முரண்பாடு மெல்ல தலைதூக்குகிறது அதேசமயம், வளரும் நாடுகள் தங்களின் சந்தையை, இயற்கை வளத்தை, மற்றும் பொருளாதாரத்தை பன்னாட்டு நிறுவனங்கள் சுரண்டிட அனுமதிப் பதின் வாயிலாக, அந்த நாடுகளின் தேசிய*

நலனை சரணடைய செய்ய ஏகாதிபத்திய சக்திகள் பல வழிகளில் அவற்றிற்கு அழுத்தம் தருகின்றன.''

அதன் விளைவாக, லாபத்தை அதிகரிக்க உழைப்பாளர் மீதான தாக்குதல் தீவிரப்படுத்தப் பட்டது. நவீன தாராளமயக் கொள்கைகளை கடைப்பிடிக்கும் அனேக வளர்ந்த, வளரும் நாடுகள் அதிகளவில் சிக்கன நடவடிக்கைகளை மேற்கொள்வது, தொழிலாளர்களின் உரிமை களை குறைப்பது, பொதுசேவைகளை நீக்குவது, விலைகளை உயர்த்துவது போன்றவற்றை அமுல் படுத்துகின்றன.

பெட்ரோலிய பொருளிற்கான அதிக வரி உயர்வை எதிர்த்து சென்ற ஆண்டு நவம்பரில், பிரான்சில் துவங்கிய தொழிலாளி வர்க்கத்தின் போராட்டமான ''எல்லொ வெஸ்ட்'' இயக்கம் (மஞ்சள் மேலங்கி இயக்கம்—அதில் ஈடுபடுபவர் கள் மஞ்சள் மேலங்கி அணிந்திருப்பர்) இன்னும்

தொடர்கிறது இதனால், குறைந்தபட்ச ஊதியத் தில் *100* யூரோ அதிகரிக்கவும், குறைந்த ஊதிய ஓய்வூதியதாரர்களுக்கும், ஊழியர்களின் கூடுதல் கால ஊதியம், போனஸ் ஆகியவற்றிற்கும், திட்டமிட்ட வரி உயர்வினை கைவிடவும், வலது சாரி மக்ரோன் அரசு நிர்பந்திக்கப்பட்டது. ஐரோப்பாவிலேயே சிறந்ததான, பிரான்ஸ் தேசிய ரெயில்வேயை தனியார் மயமாக்குவதற்கும், ஊழி யர்களின் பணிநிலைகளில் மாற்றம் கொணர்வதற் கும், ஊழியர் எண்ணிக்கை குறைப்பிற்கு எதிராக வும் பிரான்சின் ரெயிவே தொழிலாளர்கள் ஏற்கனவே போராட்டத்தில் உள்ளனர்.

"ஓய்வூதிய சீர்திருத்தம்"என்று பெயரில் வருவதை ரஷ்ய தொழிலாளர்கள் எதிர்த்து போராடி வருகின்றனர்; கிரீஸில், சிரிஸா அரசின் "சிக்கன" கொள்கைகளுக்கு எதிராக, வேலைநிறுத் தம் உள்ளிட்ட போராட்டங்களில் தொழிலாளர் வர்க்கம்

*ஈடுபட்டு வருகிறது. ருமேனியாவில், குறைந்தபட்ச கூலியையும், ஜெர்மனியில் ஊதிய உயர்வையும் கோரி வருகிறார்கள். பயணிகள் பாதுகாப்பை அச்சுறுத்துவதும், 6000 நடத்துனர் பணிகளை நீக்கிட வழி வகை செய்யும் 'ஓட்டுனர் மட்டும்' என்ற முறையில் ரயில் இயக்குவதை விரிவாக்குவதற்கு எதிராக வட இங்கிலாந்தில் ரயில்வே தொழிலாளர்கள் வேலை நிறுத்தத்தில் இறங்கினர். பணிநிலைகளின் மீதான தாக்கு தலுக்கு எதிராக சுவிட்சர்லாந்து கட்டுமான தொழிலாளர்கள் பணிமுடக்கம் செய்தனர். மேம்பட்ட ஊதியத்திற்காகவும், பணிநிலைமை களுக்காகவும் போராடி வருகின்றனர். பெல்ஜி யம், இத்தாலி, நெதர்லாந்து, போர்ச்சுகல், ஸ்பெயின் ஆகிய ஐந்து நாடுகளின் ஐரோப்பிய விமான பணியாளர்கள் மேம்பட்ட பணி நிலை மைகளுக்காக போரா டினர். கல்விக்கான அதிக நிதி ஒதுக்கீடு, ஊதிய உயர்வு ஆகியவை கோரி போராடிய அமெரிக்க*

ஆசிரியர்களின் போராட்டம், அந்த நாட்டின் பல மாநிலங்களுக்கும் பரவியது. அதே போன்ற கோரிக்கைகளுக்காக, அர்ஜண்டினா, இங்கிலாந்து, மற்றும் ஈரான் ஆசிரியர்கள் போராடுகின்றனர். நெகிழி தொழிற்சாலை தொழிலாளர்கள், போக்குவரத்து தொழிலாளர்கள், தீயணைப்பு வீரர்கள், முனிசிபல் தொழிலாளர்கள் உள்ளிட்ட ஆயிரக்கணக்கான பல்வேறுபட்ட தொழிலாளர் கள் ஊதியம் மற்றும் மேம்பட்ட பணிநிலைமை களுக்காக வேலை நிறுத்தம் செய்தனர். குறைந்த பட்ச ஊதிய விகிதத்தை உயர்த்த வேண்டி ஆஸ்திரேலியாவின் மெல் போர்ன் நகரில் ஒரு லட்சம் ஊழியர்கள் அணிவகுத்தனர்.

வேளாண் வர்த்தக பெரு நிறுவனங்களின் கொள்கைகளை விவசாயிகளும் பல நாடுகளில் எதிர்த்தனர். ஏகாதிபத்தியம் ஏற்பாடு செய்யும் உள் நாட்டு போர் மற்றும் அரசியல் ஆதாயத்திற்

கெதிராக உழைக்கும் மக்கள் தெருக்களுக்கு வரத் துவங்கி விட்டனர். ஜனாதிபதி லூலாவின் விடுதலை வேண்டி நடந்த பெரும் ஆர்ப்பாடங் களை பிரேசில் கண்டது. அது போலவே, மதுரோ அரசிற்கு ஆதரவாக வெனிசுலாவின் உழைக்கும் வர்க்கம் வெளி வந்தது.

இந்தியாவில் எதேச்சதிகார,வகுப்புவாத நரேந்திர மோடி அரசின் முன்னெப்போதையும் இல்லாத தாக்குதல்களை இந்தியத் தொழி லாளி வர்க்கம் கண்டது. பொறுப் பேற்ற ஐந்தே நாட்களுக்குள்ளாக மோடி அரசு பயிற்சி பருவ ஊழியர்களை எந்த வரையறையு மின்றி பணியாற்றும் வகையில் பயிற்சி பருவ (ஹயீயீசநவேiஉநளாiயீ ஹஉவ) சட்டத்தினை திருத்தியது. பாராளுமன்ற தேர்தல் அறிவிக் கப்படுவதற்கு சில நாட்கள் முன்னர், குறைந்தபட்ச ஊதியத்தை குறைக்க முயற்சித்தது, பெரு நிறுவனங்கள் ‘எளிதாக தொழில் செய்ய’ என்ற

பெயரில், இந்திய தொழிலாளி வர்க்கம் போராடி பெற்ற உரிமைகளை 'இல்லாத தாக்கிட மோடி ஆட்சி தீவிர மாக முயற்சித்தது. முதலாளிகளுக்கு சலுகையாக, படிவ சமர்ப்பிப்பு, குழந்தை தொழிலாளர் ஒழிப்பு சட்டம், தொழிற் சாலை சட்டம் ஆகியவை திருத்தப்பட்டன. "குறிப்பிட்ட கால பணி" என (ஒப்பந்த தொழி லாளர் முறை போன்ற ஒன்று) ஒரு ஆணை நிர்வாக ஆணை வழி நிறைவேற்றப் பட்டது., வருங்கால வைப்பு நிதி, தொழிலாளர் காப்புறுதி திட்டம் போன்ற சமூக பாதுகாப்பு திட்டங்கள் பல வழி முறைகளில் தகர்க்கப்பட்டன,

உற்பத்தி திறன் பல மடங்கு அதிகரித்த பொழுதே, உண்மை ஊதியம் குறைந்தது. மதிப்பு உருவாக்க செலவில் ஊதியத்தின் பங்கு 9 சதவீத மாகக் குறைந்தது. அதே சமயம் லாபத்தின் பங்கு 60 சதவீதமாக உயர்ந்து அசைந்து கொண்டிருந்தது. சர்வ தேச தொழிலாளர்

அமைப்பின் இந்திய ஊதிய அறிக்கை 2018 ன் படி நாட்டில் 82 சதவீத ஆண் தொழிலாளர்களும் 92 சதவீத பெண் தொழிலாளர்களும் மாதத்திற்கு ரூ.10000/-ற்கும் குறைவாக ஊதியம் பெறு கிறார்கள். இந்தியா வில், 67 சதவீத குடும்பங்களின் மாத ஊதியம் ரூ 10000/-ற் கும் குறைவாக உள்ளதென கூறியதாக அஸிம் பிரேம்ஜி பல்கலை கழக அறிக்கை 2018 சொல் கிறது. 2015-16 வரை மொத்த தொழிலாளார் களில் 46 சதவீதமான 57 சதவீத சுய தொழில் புரிவோர் மாதந்தோறும் ரூ 7000/-மும், மொத்த தொழிலாளார்களில் 50 சதவீத மான பேர் வெறும் ரூ 5000/- மாதம் பெறுவதாக தொழிலாளர் செயலகம் அறிவிக்கிறது. இதெல்லாம் சராசரி எண்களே. பெரும்பான்மை உழைக்கும் பணி யாளர் திரளிற்கு உண்மை ஊதியம் மிகவும் கீழே இருக்கும். அதுவும் தொடர்ச்சியாக ஒவ்வொரு மாதமும் கிடைக்காது. அதே சமயம் முதலாளி களுக்கு வரி தள்ளுபடிகளும், விலக்குகளும் ஒவ்வொரு வருடமும் ஐந்து இலட்சம்

*கோடிக்கும் மேலாக கிடைக்கிறது. மேலும் பெரு நிறுவனங் களின் வரி செலுத்தாத தொகை மட்டும் ரூ 7.31 இலட்சம் கோடி. (2016-17).*

*கிராமப்புற தபால்காரரர்கள், மத்திய மாநில அரசு ஊழியர்கள், ரெயில் ஓட்டுனர்கள், பாது காப்பு துறை ஊழியர்கள், ஆசிரியர்கள், வங்கி ஊழியர்கள், ஒப்பந்த, வெளி நிறுவன ஊழியர் கள், பி.எஸ்.என் எல் ஊழியர்கள், சாலை போக்கு வரத்து தொழிலாளர்கள், மின் ஊழியர்கள், அங்கன்வாடி பணியாளர்கள், ஆஷா (அங்கீகாரம் பெற்ற சமூக சுகாதார ஆர்வலர்கள்) மற்றும் மதிய உணவு ஊழியர்கள், துப்புரவு மற்றும் முனிசிபல் தொழிலாளர்கள், மருந்து மற்றும் விற்பனை பிரதிநிதிகள், பன்னாட்டு நிறுவனங்களின் நவீன ஆட்டோமொபைல் உற்பத்தியில் வேலை செய்யும் தொழிலாளர் உள்ளிட்ட ஆலைத்தொழிலாளர்கள், தேயிலை தோட்ட தொழிலாளர்கள், ஏன், தகவல்*

தொழில் நுட்ப ஊழியர்கள் உட்பட அனைவரும் அவரவர் கோரிக்கைகளுக்காக போராட்டத்தில் இறங்கினர். இந்த துறைகள் பலவற்றில் தொழி லாளர்களின் முழு பங்களிப்போடு வேலை நிறுத்தம் முழுமையாக நடைபெற்றது. ஓய்வூதிய திட்டங்களின் மீதான தாக்குதலால் ஓய்வூதிய தாரர்களும் அதனை எதிர்த்து போராட்டத்திற்கு வந்து கொண்டிருக்கின்றனர்.

அண்மையில் நடந்த அனைத்து போராட்டங் களிலும், பெண் தொழிலாளர்களின் பெரும் பங்களிப்பும், அணி சேர்க்கையும், அவர்களின் தலைமைப்பண்பும் முக்கிய அம்சமாகும். பிரச் சனை சார்ந்த போராட்டங்களில் முன்னெப் போதும் இல்லாத ஒற்றுமையை இக்காலத்தில் காண முடிந்தது. இத்தகைய தாக்குதல்களுக் கெதிராக, 20 கோடி தொழிலாளர்களுக்கு மேல் பங்கேற்ற, 2 செப்டம்பர் 2015, 2 செப்டம்பர் 2016 மற்றும்

*8, 9 ஜனவரி 2019 உள்ளிட்ட பொது வேலை நிறுத்தத்தில் பி எம் எஸ் நீங்கலாக மற்ற அனைத்து மத்திய தொழிற்சங்கங்களுடனான ஒற்றுமை பலப்படுத்தப்பட்டது.*

*விவசாயிகள், விவசாயத் தொழிலாளர்கள், வாலிபர், மாணாவர், மாதர், தலித், பழங்குடி யினர் என சமுதாயத்தின் பல்வேறுபட்ட பகுதி யினரும் அரசாங்கத்தின் கொள்கைகளுக்கெதி ராக போராடினர்*

### வளர்ந்துவரும் தொழிலாளர்-விவசாயி ஒற்றுமை

*இந்தியாவில் தொழிலாளர் வர்க்க இயக்கங் கள் பிரச்சனைகளை கையிலெடுப்பதில் மேன் மேலும் பக்குவமடைவதோடு, விவசாயிகளின் போராட்டங்களோடு இணைந்து கொள்கின்றன என்பது தற்போதைய இயக்கங்களின் குறிப்பிடத் தக்க அம்சமாகும். 2015 பொது வேலை நிறுத்த*

*கோரிக்கைகளில் எழுப்பப்பட்ட முக்கிய கோரிக் கைகளில் நிலம் கையகப்படுத்தும் பிரச்சனை ஒன்றாகும். தொழிற்சங்க இயக்கம் தீவிரமாக விவசாயிகளின் நலன்களை ஆதரித்தது. 9 ஆகஸ்ட் 2018 சிறை நிரப்பும் போராட்டம், 14, ஆகஸ்ட் சமு'ஹிக் ஜாக்ரண்,( கூட்டான விழிப் புணர்வு), மற்றும் சரித்திர முக்கியத்துவமான 5 செப்டம்பர் 2018 மஸ்தூர் கிஸான் சங்கர்ஷ் பேரணி (தொழிலாளர் விவசாயி போராட்ட திரளணி) ஆகியவற்றில் அமைப்பு ரீதியாக மேலிருந்து கீழ் வரை படிப்படியாக திரட்ட அ இ வி சங்கம் மற்றும் அ இ வி தொ சங்கம் ஆகிய வற்றுடன் இணைந்து தொழிலாளர் விவசாயி கள் கூட்டணி என்ற திசையில் உருவாக்க சி ஐ டி யூ முன்முயற்சி எடுத்தது. விவசாயிகளின் போராட் டங்கள் சி ஐ டி யூ வினால் முழுமையாக ஆதரிக் கப்பட்டன. மத்திய தொழிற்சங்கங்களால் ஏற்று கொள்ளப்பட்ட தொழிலாளர் கோரிக்கை சாசனம், அனைத்து மக்களின்*

கோரிக்கைகளை உள்ளடக்கியதாகும்.

பல்வேறு பட்ட மக்களின் தொடர்ச்சியான இயக்கங்கள்தான், வர்க்க அமைப்புக்களின் பல மான அடித்தளத்துடன், வர்க்க, வெகுஜன, சமூக அமைப்புக்களின் கூட்டு மேடையாக ஜன் ஏக்தா, ஜன் அதிகார் அந்தோலன் (மக்கள் ஒற்றுமை மக்கள் அதிகாரம் இயக்கம்) அமைய உதவியது. நாட்டின் உழைக்கும் மக்களின் சில முக்கிய பிரச்சனைகளை நடை பெற்று கொண்டிருக்கும் பாராளுமன்ற தேர்தலில் பிரதான அரசியல் விவாதமாக்கியது இந்த இயக்கங்களின் பலனே ஆகும்.

### முன்னோக்கிய பாதை

நவீன தாராளமயமாக்கலின் தோற்றுவாய்க் குப் பின், முதன் முறையாக அரசியலும், அடிப் படை வர்க்கங்களான தொழிலாளர் வர்க்கம்,

*விவசாயத் தொழிலாளர் மற்றும் ஏழை விவசாயிகளின் இயக்கங்களும் மையப்புள்ளியாக வெளிப்பட்டுள்ளன. வாலிபர், மாணவர், மாதர், சூழலியலாளர்கள், தலித், பழங்குடியினர், சிறு பான்மையினர், அனைத்து ஒதுக்கப்பட்ட பிரிவினர்களின் முற்போக்கு சமூக இயக்கங்கள் இந்த நீரோட்டத்தில் இணைகிண்றனர்.*

*ஆயினும், சி ஐ டி யூ வின் செயற்குழு சுட்டிக் காட்டுவது வருமாறு: "நவீன தாராளமய முதலாளித்துவ ஒழுங்குமுறை அமைப்பின் உள்ளார்ந்த நெருக்கடியானது, பல நாடுகளில், தீவிர வலதுசாரி சக்திகள் அரசியல் அரங்கில் தலை தூக்கும் நிகழ்வோடு சேர்ந்தே நடக்கிறது. நவீன தாராளமய கொள்கைகளின் தாக்கம் மக்களின் வாழ்வில் மற்றும் வாழ்வாதாரத்தில் ஏற்படுத்தும் பிரச்சனைகளினால் அவர்களின் மத்தியில் வளர்ந்து வரும் அதிருப்தியை, அமைதி யின்மையை வலதுசாரி சக்திகள் தங்களின் அரசியல் ஆதாயத்திற்கு*

பயன்படுத்த முடிகிறது. உழைக்கும் மக்களின் பரந்துபட்ட போராட்டங் கள் நடந்த போதிலும், பல நாடுகளில் வலதுசாரி கள் தலை தூக்க காரணம், சமூக ஜனநாயகவாதி களின் துரோகங்களும் மற்றும் மாற்று பொருளா தார முறையை தராத, தொடர்ச்சியாக வர்க்க பார்வையோடான போராட்டங்களாய் அவற்றை கொண்டு செல்லாத பலகீனப்பட்டுள்ள இடது சாரிகளின் தோல்வி அல்லது இரு போக்குகளு மேயாகும்.

அரசியல் அரங்கில் இந்தியாவும் வலது மாற்றத்தை எதிர் கொண்டு வருகிறது. நாட்டின் மதச்சார்பற்ற, ஜனநாயக இழை தீவிரமான தாக்குதலுக்குள்ளாகிறது. பாஜக மட்டுமல்ல, இடதுசாரிகள் தவிர்த்த மற்றெல்லா முக்கிய அரசியல் கட்சிகளும் நவீன தாராளமயக் கொள்கைகளுக்காக வாதிடுபவர்களே. அரசியல் விவாதத்தில் சில

அடிப்படை பிரச்சனைகளை வர்க்க, வெகுஜன இயக்கங்கள் கொண்டு வரமுடிந்தாலும், தேர்தலுக்கு பின்னர் கூட உழைக்கும் மக்களுக்கு ஆதரவாக அரசின் கொள்கைகளில் அதிக மாற்றமிருக்கப் போவ தில்லை. மாறாக, முதலாளித்துவ அமைப்பின் உள்ளார்ந்த நெருக்கடி இன்னும் தீவிரமாவதால், உழைப்பவர் மீதான தாக்குதலும் மிக அதிக மாகப் போகிறது.

எவ்வாறு உழைக்கும் மக்களின் போராட்டங் களை முன்னெடுப்பது மற்றும் அதனை பலப் படுத்துவது என்பதும், ஜனநாயகத்தை காத்திட வும், அவ்வப்போது அரசை மாற்றுவது மட்டு மேயின்றி கொள்கைகளில் மாற்றம் கொணர அவ்வாறான போராட்டங்களை எப்படி அரசியல் சக்தியாக மாற்றுவது என்பதும்தான் தொழிற்சங்க இயக்கத்தின் முன்னால் உள்ள சவாலாகும். பரந்து விரிந்த பலமான தொழிற்சங்க இயக்க அடித்தளம்

இவ்வாறான இயக்கத்திற்கு அஸ்திவாரமாகும். விவசாயிகளின் இயக்கம் இணைவதால் இந்த வர்க்க அணி சேர்க்கை, பொருளாதார தாக்குதலுக்கு எதிரான அடித் தளமாக மட்டுமில்லாமல், கிராமப்புறங்களின் சமூக ஒடுக்குமுறை, மற்றும் வகுப்புவாத பிரி வினை அரசியலிற்கு எதிரான சக்தியாகவும் விளங்கும். வரும் நாட்களில், தாக்குதலுக்கு எதிரான, மக்களுக்கான மாற்றை முன்னெடுப் பதாக, அனைத்து வகையான சுரண்டலுக்கும் முடிவுகட்டி, எழும் இந்தியாவை வடிவமைப் பதில் வர்க்க அரசியல் ஓர் தீர்மானகரமான பங்கினை வகித்திடும்.

# 2. மீண்டு வருமா வெனிசுவேலா?

*இ. பா. சிந்தன்*

வெனிசுவேலா என்கிற தென்னமெரிக்க நாட்டை 1999 வரையிலும் அமெரிக்க ஆதரவு பொம்மை அரசுகள் ஆட்சி புரிந்து வந்தவரை மேற்குலக நாடுகளோ ஊடகங்களோ அந்த நாடு குறித்து பெரிதாக அலட்டிக் கொள்ளவுமில்லை, செய்திகளாக நமக்குத் தெரிவிக்க விருப்பப்பட வுமில்லை. அதன் பிறகு 1999-ல் மக்களின் பேராதரவுடன் 'ஹூகோ சாவேசின் ஆட்சி மலர்ந்த பின்னர்தான், வெனிசுவேலாவை அது வரையிலும் சுரண்டிக் கொழுத்துக் கொண்டிருந் தவர்கள் எல்லாம் நீலிக் கண்ணீர் வடிக்கத் துவங்கினர்.

சாவேசும் அவரது அரசும், மக்கள் நலத் திட்டங்களையே அதற்கெல்லாம் பதிலாக

*கொடுத்தனர்.*

*• 1999-ல் 90 பில்லியன் டாலராக இருந்த வெனிசுவேலாவின் மொத்த உள்நாட்டு உற்பத்தி, 2013-ல் 330ரூ வளர்ச்சியடைந்து 385 பில்லியன் டாலராகியது.*

*• வெனிசுவேலாவின் அயல்நாட்டு கடன், மொத்த உள்நாட்டு உற்பத்தியில் 19ரூ ஆக குறைந்தது. ஆனால் அதேகாலகட்டத்தில், அமெரிக்காவின் கடனோ 106ரூ ஆகவும், ஜெர்மனி 147ரூ ஆகவும், ஜப்பான் 60ரூ ஆகவும் உயர்ந்தது குறிப்பிடத் தக்கது.*

*• 1999-ல் 66ரூ மக்கள் வறுமைக் கோட்டுக்குக் கீழிருந்தார்கள்; அது 2013இல் 23ரூ ஆக குறைந்தது. வறுமையினை ஒழிப்பதற்காக, 1999 முதல் 2013 வரையிலான 14 ஆண்டுகளில் மக்கள் நலப்பணி களுக்காக 550 பில்லியன் டாலர் செலவிடப் பட்டது.*

*• குழந்தை இறப்புவிகிதம் 1 லட்சத்திற்கு 27 என்கிற*

எண்ணிக்கையிலிருந்து, 13 ஆக குறைந்தது. நாட்டின் எண்ணெய் வளங்களை எல்லாம் நாட்டுடைமையாக்கி, அதில் வரும் வருமானத்தை வறுமை ஒழிப்பிற்கு பயன்படுத்தியது சாவேஸ் அரசு.

• 1999 முதல் 2013 வரையிலான ஆண்டுகளில் 22 புதிய பல்கலைக் கழகங்கள் துவங்கப்பட்டுள்ளன. 5 லட்சம் பேர் மட்டுமே கல்வி பயின்று கொண்டிருந்த நிலை மாறி, இலவசக் கல்வியால் அனைவருக்கும் கல்வி சாத்தியமாகியிருக்கிறது. உயர் கல்வியும் கூட முழுவதும் இலவசமாக வழங்கப்படுகிறது. கல்விக் கட்டணம் என்கிற வார்த்தையே இல்லாமல் போயிருக்கிறது.

• 2000-ஆம் ஆண்டில் 53ரூ பேர் மட்டுமே எழுத வும் படிக்கவும் தெரிந்தவர்களாக இருந்த வெனிசுவேலாவில், 2013க்குள்ளாகவே 95ரூத்தைத் தொட்டு, தற்போது 97ரூ த்தையும் தாண்டிச்

சென்றிருக்கிறது. இத்தகைய சாதனையைப் புரிவ தற்கு கியூபாவும் பெருமளவில் உதவியிருக்கிறது.

- காலங்காலமாக பணக்காரரர்கள் மட்டுமே பட்டம் பெற்று வந்த சூழல் மாறி, இன்று உலகிலேயே உயர் கல்வியில் அதிகமான மாண வர்கள் சேர்ந்து படிக்கும் நாடுகளில் வெனி சுவேலா 5வது இடத்திற்கு முன்னேறியிருக்கிறது. தென்னமெரிக்க நாடுகளில் கியூபாவுக்கு அடுத்தபடியாக இரண்டாமிடத்தில் இருக்கிறது வெனிசுவேலா. இத்தனையையும் மிகக் குறைந்த காலகட்டத் தில் சாதித்திருக்கிற மக்கள் நல வெனிசுவேலா அரசுக்கு இன்று என்னவாயிற்று?

## அமெரிக்காவின் தொடர் சதித்திட்டங்கள்

உலகிலேயே மிக அதிக அளவில் எண்ணை இருப்பு கொண்ட நாடு வெனிசுவேலாதான் (சவுதி அரேபியா கூட இரண்டாவது இடத்தில் தான்

இருக்கிறது). சாவேசின் சோசலிச அரசு அமைவதற்கு முன்பு வரை அமெரிக்காவின் கைப் பாவை அரசுகள் பல ஆண்டுகளாக வெனிசு வேலாவை ஆண்டு வந்தமையால், அமெரிக் காவைப் பொறுத்தவரையில் எண்ணை இறக்கு மதிக்கு வெனிசுவேலா எப்போதும் ஒரு நம்பிக் கையான நாடாகவே இருந்து வந்திருக்கிறது. பல ஆண்டுகளாக நாட்டின் ஒட்டுமொத்த எண்ணை வளமும் வெனிசுவேலாவை ஆண்டுவந்த ஆளும் வர்க்கத்தின் தனிச் சொத்தாகவே இருந்து வந்தது.

உலகிலேயே மிக அதிகமான எண்ணை இருப்பு கொண்ட வெனிசுவேலாவில் 80 சதவீதத் திற்கும் மேலான மக்கள் வறுமைக் கோட்டிற்கு கீழ்தான் வாழ்ந்து வந்தார்கள். வெனிசுவேலா மக்களின் ஏகோபித்த ஆதரவுடன் ஆட்சிக்கு வந்த ஹூகோ சாவேசின் அரசு பதவியேற்ற பின் நிலைமை தலைகீழாக மாறத் துவங்கியது. பிப்ரவரி 2002-ல்

*வெனிசுவேலாவில் இருக்கும் எண்ணை நிறுவனங்கள் அனைத்தையும் நாட்டு டைமையாக்கியது சாவேஸ் அரசு. அதில் வரும் இலாபம் முழுவதையும் வறுமைக் கோட்டுக்குக் கீழிருக்கும் 80ரூ மக்களின் வாழ்க்கையை உயர்த் தப் பயன்படுத்தப்படும் என்றும் பல்லாயிரக் கணக்கான மக்களின் கரகோஷங்களுக்கிடையே அறிவித்ததோடு நிற்காமல், அதற்கு செயல் வடிவமும் கொடுத்தார்.*

*காலங்காலமாக எண்ணை வளங்களை சுரண்டி கொழுத்த வெனிசுவேலாவின் முன்னாள் எண்ணை முதலாளிகளும் அமெரிக்காவும் இணைந்து, வெனிசுவேலாவில் எப்படியாவது ஒரு ஆட்சி மாற்றத்தினை உருவாக்கவேண்டுமென காத்துக் கொண்டிருக்கிறார்கள். அதற்காக அவர்கள் எடுத்த/எடுத்துவருகிற முயற்சிகள் கொஞ்ச நஞ்சமல்ல.*

- *2002-ல் சாவேசைக் கடத்தி, ஆட்சிக் கவிழ்ப் பினை*

நடத்த முயற்சித்தது அமெரிக்கா. பத்து இலட்சத்திற்கும் மேற்பட்ட வெனிசுவேலா மக்கள் தெருவில் இறங்கிப் போராடி இராணு வத்திற்கு நெருக்கடி கொடுத்து அச்சதியை முறியடித்தனர்

• உலகிலேயே மிகச் சிறந்த நம்பகமான தேர்தல் முறையினைக் கொண்ட நாடு வெனிசுவேலா தான் என்று அமெரிக்காவின் முன்னாள் அதிபர் ஜிம்மி கார்ட்டரின் குழுவே ஆய்வு செய்து பாராட்டியும், அதனை முறைகேடான தேர்தல் முறையென்று சொல்லி, 2005-ல் எதிர்க்கட்சி யினரை பாராளுமன்றத் தேர்தலை புறக்கணிக்க வைத்தது அமெரிக்கா. அதன் மூலம், உலக அரங் கில் வெனிசுவேலாவின் பெயரையும் தரத்தையும் தாழ்த்திடலாம் என்கிற கணக்கினை போட்டது அமெரிக்கா. ஆனால், இம்முறையும் அமெரிக்கா வின் எண்ணம் ஈடேறாமல் போனது.

*• 2012 வெனிசுவேலா தேர்தலுக்கு முன்பாக எண்ணைக் கிணறுகள் சில தீப்பிடித்து எரிந்தது. இத்தீவிபத்திற்கு, முன்னாள் எண்ணைக் கிணறு முதலாளிகள் காரணமாக இருக்கலாம் என்பதற் கான ஆதாரங்களும் கிடைத்திருக்கின்றன.*

*• சாவேசின் மரணத்திற்குக் காரணமான கேன்சர் உருவான விதத்திலேயே மர்மங்கள் நீடித்துக் கொண்டிருக்கின்றன.*

*• சாவேசிற்குப் பின் வந்த மதுரோவும் அதிபர் தேர்தலில் வெற்றி பெற்றதை ஏற்றுக் கொள்ள முடியாத எதிர்க்கட்சியினர், ஒட்டுமொத்த தேர் தலையே முறைகேடாக நடந்ததென குற்றஞ் சாட்டினர். அதனைத் தொடர்ந்து நடந்த மறு வாக்கு எண்ணிக்கையில், எவ்வித முறைகேடும் நடைபெறவில்லை என்பது உறுதிசெய்யப்பட்டது.*

அடுத்தடுத்த அதிபர் தேர்தல்களில் மதுரோ வின் அரசை விட்டுவைத்தால், நிரந்தரமாக வெனிசுவேலாவைக் கைப்பற்றவே முடியாமல் போய்விடும் என்று கருதி, ஒவ்வொரு முறையும் தேர்தல் நடப்பதற்கு முன்பும், பின்பும் குழப்பங் களை விளைவிக்கத் துவங்கிவிட்டனர்.

பல முறை மதுரோவைக் கொல்ல முயற்சி நடந்தது; அவரது சீனப் பயணத்தின்போது போர்டோ ரிகோ வழியாக பயணிக்கவிடாமல் தடுத்தது; வீதிகளில் இறங்கி அரசைக் கவிழ்க்க கலவரங்களைத் தூண்டியது; தேர்தலுக்கு மறுநாளே குழந்தைகள் உட்பட பலரை அந்தக் கலவரத்தில் கொன்றது என பலவழிகளையும் கையாண்டு பார்த்தது அமெரிக்கா.

சாவேஸ் காலத்திலிருந்தே அவரைக் கொல்ல சதித்திட்டம் தீட்டிவந்த அமெரிக்க சதியாளன் ரோஜர் நொரிகா மற்றும் ஒட்டோ ரெய்க் ஆகியோர்,

அமெரிக்காவில் நடந்த ஐ.நா. சபைக் கூட்டத்தில் பேசுவதாக இருந்த மதுரோவை கலவரமேற்படுத்திக் கொல்ல மிகப்பெரிய சத்தித் திட்டம் தீட்டியதை வெனிசுவேலா அரசு அம்பலப் படுத்தியது.

## 2013-ல் சாவேசின் மரணம்

நூற்றாண்டுகளாக ஆதிக்க சக்திகளின் கை களில் நேரடியாகவோ அல்லது கைப்பாவை அரசுகளின் வழியாகவோ அடிமைப்பட்டுக் கிடந்த ஒரு தேசம், ஒட்டுமொத்தமாக சுரண்ட லைப் புரிந்துகொண்டு எழுச்சிபெற்று ஒரு புரட் சிகர அரசை அமைத்துவிடவில்லை. அந்நாட்டில் ஏற்கனவே இருந்த தேர்தல் முறைகளைப் பயன் படுத்தி மாற்றத்தை உருவாக்கிக்காட்டுகிறேன் என்று 'ஹூகோ சாவேஸ் என்கிற ஒரு தனி மனிதனின் நம்பிக்கைக் குரலும் அவருடன் இணைந்த சில சமூக இயக்கங்களும் இணைந்து அங்கே 1998-ல் ஒரு ஆட்சி

மாற்றம் நிகழ்ந்தது. அதனால் கீழிருந்து வலிமையாக கட்டமைக்கப் பட்ட ஒரு புரட்சிகர அரசாக அவ்வரசு உருவாக வில்லை.

சோசலிசமே தீர்வு என்கிற கருத்தும் மக்களிடத்தில் அவ்வாட்சி உருவாகிற வரையிலும் அழுத்தமாக சொல்லப்படவுமில்லை. ஆனால் ஆட்சிக்கு வந்ததுமே சாவேசும் அவரது அரசும், முதலாளித்துவத்தின் காலடியில் மண்டியிட்டெல்லாம் எவ்வித சமூக மாற்றத்தையும் கொண்டு வந்துவிட முடியாது என்றும், சோசலிசப் பாதையை நோக்கி நடைபோடுவது மட்டுமே சரியான தீர்வை நோக்கை அழைத்துச் செல்லும் என்றும் பேசத் துவங்கினர். அதனை மக்களும் நம்பத் துவங்கினர். அதன் காரணமாகவே மக்கள்நல அரசை நடத்துவதற்கு உதவுகிற வகையிலான சட்டங்களை இயற்ற வேண்டும் என்கிற கோரிக்கையுடன் உருவாக்கப்பட்ட புதிய

அரசிய லமைப்புச் சட்டத்திற்கும் மக்கள் பேராதரவு கொடுத்தனர். அதன் தொடர்ச்சியாக எண்ணை நிறுவனங்களை ஒட்டுமொத்தமாக அரசுடைமை யாக்கியது; கல்வியையும் மருத்துவத்தையும் முற்றிலு மாக இலவசமாக்கியது; நாடு முழுவதிலுமுள்ள மக்களை அரசில் நேரடியாகவோ மறைமுகமாக வோ பங்கெடுக்க வைத்து மக்கள் பங்கெடுப்பு ஜனநாயகமாக மாற்றத் துவங்கியது என சாவேஸ் அரசின் அனைத்து முயற்சிகளுக்கும் பெரும்பான் மையான மக்கள் ஒத்திசைவு வழங்கினர்.

சோசலிசம் குறித்து வெனிசுவேலாவின் பெரு வாரியான மக்களுக்கு புரிதல் ஏற்படுகிற வரையி லும் தேர்தல்களின் அவசியத்தை சாவேஸ் நன்கு உணர்ந்திருந்தார். அதனாலேயே பாராளுமன்றத் தேர்தல் முதல் உள்ளாட்சித் தேர்தல் வரையிலு மான அனைத்துத் தேர்தல்களையும் வர்க்கப் போராக மாற்றி

பிரச்சாரம் செய்தார். உழைக்கும் வர்க்கத்திடம் அதிகாரம் இருப்பதற்கு தேர்தல் வெற்றிகளும், அதனைத் தொடர்ந்த திட்ட நிறைவேற்றங்களும் முக்கியம் என்பதை உணர்ந்து அனைத்தையும் பிரச்சாரமாக்கினார்.

தன்னுடைய அதிகார எல்லைக்குட்பட்டிருந்த எண்ணை நிறுவனங்களை நாட்டுடைமையாக்க முடிந்த சாவேஸ் அரசால், அதற்கு அடுத்த படியாக இருந்த மற்ற முக்கியமான உற்பத்தித் துறைகளான விவசாயம் மற்றும் உற்பத்தித் தொழிற்சாலைகளை அரசுடைமையாக்கவோ மக்களின் வசம் ஒப்படைக்கவோ அவ்வளவு எளிதாக இயலவில்லை. உற்பத்தி மட்டுமின்றி, உற்பத்தி செய்தவற்றை கொன்டு சேர்க்கும் விநி யோக மற்றும் விற்பனை வலைப்பின்னல்களை யும் ஆக்கிரமித்திருக்கிற பெருமுதலாளிகளிட

மிருந்து பறிக்கவும் முடியவில்லை. அதனால் அதற்கு மாற்றாக மக்களிடமே அதிகாரம் அதிக மாக இருக்கும்படியான கூட்டுறவு அமைப்புகளை (சமூக உற்பத்தி நிறுவனங்கள்) சாவேஸ் அரசு அதிவேகமாக நாடெங்கிலும் உருவாக்கத் துவங் கியது. 2006-ல் சாவேஸ் தேர்தல் வாக்குறுதியாக சொல்லியபடி, தன்னாட்சி பெற்ற மக்கள் கம்யூன்கள் உருவாக்கப்பட்டன. அரசு வழங்கும் நிதியினை எவ்வாறு செலவு செய்யலாம், தங் களது கம்யூனுக்கு ஏற்ற வேலைவாய்ப்பை எப்படி உருவாக்கலாம் என்பதை அந்தந்த கம்யூன்களே கூடி விவாதித்து முடிவெடுக்கலாம். ஆனால் இவையெல்லாம் அடுத்த கட்டத்தை நோக்கி நகர்வதற்கு முன்னரே யாருமே எதிர்பார்க்காத தருணத்தில் சாவேஸ் 2013-ல் மரணமடைந்தார். சோசலிசக் கட்டமைப்பு அரசு அமைவதற்கு முந்தைய ஒரு மக்கள் நல அரசில் தலைமையின் பாத்திரம் மிகமுக்கியம் என்பதை

சாவேஸ் பதவி வகித்த அந்த 14 ஆண்டுகளிலும் கண்கூடாகப் பார்க்கமுடிந்தது.

சாவேஸ் உயிரோடு இருந்த காலத்திலேயே அவரைக் கொல்லவும் ஆட்சியைக் கவிழ்க்கவும் அமெரிக்கா பலமுறை முயன்று தோற்றிருந்தது. அதனை சாவேஸ் மக்களின் உதவியோடே மிக லாவகமாகக் கையாண்டு அனைத்து சதிகளையும் முறியடித்தார் (அவருடைய மர்மமான மரணத் தைத் தவிர). அவருக்குப் பின்வந்த மதுரோவுக்கு, தன்னைச் சுற்றியுள்ள சதி வலைகளும், அவர் வந்து சேர்ந்திருக்கிற பதவியின் நிலையும் புரிவதற்கு கொஞ்ச காலம் தேவைப்பட்டது.

## வெனிசுவேலா மீதான பொருளாதாரப் போர்

இப்படியான சூழலில், தனக்கு ஆதரவான கட்சிகளை தேர்தல்களில் வெற்றி பெற வைத்

தோ, ஆட்சிக்கவிழ்ப்பினை நடத்தியோ மதுரோ வைக் கொன்றோ, வெனிசுவேலாவினுள் நுழைய முடியாமல் போன அமெரிக்கா, எத்தனை பில்லி யன் டாலர் செலவானாலும் வெனிசுவேலாவை தனது கைப்பாவை நாடாக மாற்றவேண்டு மென்பதற்காக ஒரு புதுவகையான போரினை ஆயுதமாகக் கையிலெடுத்திருக்கிறது. அதுதான் "பொருளாதாரப் போர்". வெனிசுவேலாவில் செயற்கையான பொருளாதார நெருக்கடியினை உருவாக்கி, அரசின் மீது மக்களுக்கு வெறுப் பினை உண்டாக்கி, மிகப்பெரிய குழப்பத்தினை விளைவிப்பதே இப்பொருளாதாரப் போரின் குறிக்கோள்.

இதன் முதலாவது சதியாக, 1999 முதல் மக்கள் நலனிற்காக உருவாக்கப்பட்டு வந்திருக்கிற உள்கட்டமைப்பு வசதியினை தகர்த்துவிட்டால், வெனிசுவேலாவின் பொருளாதார வளர்ச்சி

யினை தடுத்துவிடலாம் என்பது அவர்களின் கணக்கு. அதன்படி, சாவேஸ் இறந்ததிலிருந்தே,, வெனிசுவேலாவின் மின்சார பகிர்வு நிலையங்கள் ஒவ்வொன்றாக குறிவைத்து தாக்கப்பட்டு வருகின்றன. மின்சாரத்தை தடைசெய்து, அரசின் மீது மக்களுக்கு வெறுப்பு உண்டாக்க முயல்கிற முயற்சி இது. அதனைத் தொடர்ந்து, "இருளில் வெனிசுவேலா", "மின்சாரம் கூட வழங்காத அரசு" என்று ஊடகங்கள் மூலமாக பிரச்சாரம் முடுக்கிவிடப்பட்டன. ஆனாலும் வெனிசுவேலா அரசு, மின்பிரச்சனையை உடனுக்குடன் தீர்த்து வருகிறது.

இரண்டாவது சதியாக, உணவுப் பொருட் களை மக்களுக்கு கிடைக்கவிடாமல் செய்யத் திட்டமிட்டது அமெரிக்க ஆதரவுக் கூட்டணி. முந்தைய ஆண்டைவிட, 30ரூ கூடுதலாக உற்பத் தியாகியிருக்கிறது சோளம்; 5.5 லட்சம் டன் அரிசியும், 2.2 லட்சம் உருளைக்கிழங்கும் 2013-ல் உற்பத்தியாகியிருக்கிறது. இறக்குமதியே

*செய்யத் தேவையில்லாத அளவிற்கான உற்பத்தியிது. ஆனாலும், திடீரென சூப்பர் மார்க்கெட்டுகளில் காய்கறியோ, பாலோ, அரிசியோ கிடைக்காமல் போனது. அதிரடியாக அரசு அதிகாரிகள் சூப்பர் மார்க்கெட்டினுள் நுழைந்து பார்த்தால், அவர் களது குடோனில் டன் கணக்கில் உணவுப் பொருட்களை பதுக்கி வைத்திருக்கிறார்கள். உற்பத்தியான உணவுப் பொருட்களை மொத்த மாக விலைக்கு வாங்கி, ஊருக்கு வெளியே இன்னும் ஏராளமான குடோன்களில் பதுக்கும் வேலையினை செய்துவருகிறார்கள்.*

*வெனிசுவேலாவின் மிகப் பெரிய பணக்கார வியாபாரிகள், முன்னாள் எண்ணை நிறுவன முதலாளிகள், எதிர்க்கட்சியினர் துணையோடு அமெரிக்க அரசு கோடிக்கணக்கான டாலர் களை செலவழித்து இப்பணியினை செய்து வரு கிறது. வெனிசுவேலா அரசோ தன்னால் இயன்ற வரை அதனை*

மீட்டெடுத்து மக்களுக்கு நியாய மான விலையில் வழங்கிவருகிறது.

மூன்றாவது சதியாக, பதுக்கிய உணவுப் பொருட்களை கொஞ்சம் கொஞ்சமாக வெளியே எடுத்து விற்பனைக்கு விடுவதன் மூலம், விலை யேற்றத்தை விண்ணுயரச் செய்துவிட்டால், அரசின் மீதான அவநம்பிக்கை மக்களுக்கு அதிகமாகும் என்று சதியாளர்கள் திட்டமிட்டனர். இதனால், உணவு உற்பத்தியில் வெனிசுவேலா தன்னிறைவு பெற்றிருந்தாலும், பற்றாக்குறையினை தீர்க்க முடியாமல் போகிற கட்டாயத்துக்குள் தள்ளப் பட்டிருக்கிறது. போதாக்குறைக்கு, உற்பத்தியான உணவுப் பொருட்கள் ஒட்டுமொத்தமாக விலைக்கு வாங்கப்பட்டு, அண்டை நாடான கொலம்பியாவிற்கு சட்டவிரோதமாக கடத்திக் கொண்டுபோய் விற்கப்பட்டன. இவற்றின் மூலம் எதிராளிகளின்

சதிப்படி உணவுப் பொருட்களின் விலை உயர்ந்தது. இதனால் வெனிசுவேலாவின் பணவீக்கம் 2013-ல் இருந்தே அதிகரிக்கத் துவங்கியது.

இப்படியொரு சூழலுக்காகவே காத்திருந்த மேற்குலக ஊடகங்கள், "சோமாலியாவாக மாறிக் கொண்டிருக்கிறது வெனிசுவேலா" என்று தனது பிரச்சாரப் பணியினை முடுக்கிவிட்டன. சாவேஸ் ஆட்சிக்கு வருவதற்கு முன்பிருந்த நிலையுடன் ஒப்பிட்டால், வெனிசுவேலாவின் தற்போதைய உணவு உற்பத்திமுறை பல மடங்கு முன்னேறி யிருக்கிறது. ஐ.நா.வின் உணவு மற்றும் வேளாண் அமைப்பின் ஆய்வுப்படி, வறுமை ஒழிப்பில் வெனிசுவேலாவின் உற்பத்திமுறை மிகப்பெரிய பங்காற்றியிருக்கிறது என பாராட்டியிருக்கிறது. மூன்றாம் உலக நாடுகள் அனைத்தும் வெனிசு வேலாவைப் பின்பற்றுமாறும் அறிவுறுத்தியு மிருந்தது.

நான்காவது சதியாக, உணவுப் பொருளல்லாத இன்னபிற தொழிற்சாலைகளின் உற்பத்தியைக் குறைப்பதற்கு தொழில் நிறுவனங்களுக்கு பெரு மளவில் பணம் வழங்கப்பட்டும், உற்பத்தியான பொருட்கள் சந்தைக்கு வராமல் இரகசியக் கிடங்குகளுக்கு கொண்டு செல்லப்படவும் விநியோ கிப்பாளர்களுக்கு பெருமளவில் பணப்பட்டு வாடா நடந்துவருகிறது. வெனிசுவேலாவில் ஆட்சிக்கவிழ்ப்பினை நடத்த, அமெரிக்க மக் களின் வரிப்பணம் வாரியிறைக்கப்படுகிறது. இதற்காகவே செயல்பட்ட மூன்று அமெரிக்க நிறுவனங்களை வீடியோ ஆதாரத்துடன் அம் பலப்படுத்தி, வெனிசுவேலாவிலிருந்து வெளி யேற்றியது மதுரோவின் அரசு.

ஐந்தாவது சதியாக, மேலே குறிப்பிட்டிருக்கிற அனைத்து சதித்திட்டங்களின் மூலம் அரசுக்கு எதிராக

மிகப்பெரிய வெறுப்பினை மக்களிடம் வரவைத்து, தேர்தல்களில் மதுரோ அரசைத் தோல்வியுறச் செய்து ஆட்சிக் கவிழ்ப்பினை நடத் தத் திட்டமிட்டிருக்கிறது அமெரிக்கா தலைமை யிலான சதிக் கூட்டணி.

## ஆட்சியைக் கவிழ்க்க அமெரிக்கா தலைமையில் சதிக் கூட்டணி

2013-ம் ஆண்டு ஜூன் 13-ம் தேதி, வெனி சுவேலா ஆட்சியினை கவிழ்ப்பது எப்படி? என்பதை விவாதிக்க ஒரு இரகசியக் கூட்டம் நடந்திருக்கிறது. அக்கூட்டத்தில் பங்குபெற்றவர் களின் விவரங்களையும், கூட்டத்தில் எடுக்கப் பட்ட முடிவுகளையும் ஆர்.டி. செய்தித் தொலைக் காட்சி ஆதாரத்துடன் வெளியிட்டது.

1. டெமாக்ரடிக் இண்டெர்னஷனலிசம் பவுண் டேசன் – இந்நிறுவனத்தின் தலைவரும் அமெரிக்க ஆதரவு கொலம்பிய தீவிர வலதுசாரியுமான

அல்வரோ உரிபே மிக முக்கியமான நபராக இக்கூட்டத்தில் பங்கெடுத்தார்.

2. கொலம்பியா ஃபர்ஸ்ட் – இவ்வியக்கம்தான் அல்வரோ உரிபேவை கொலம்பியாவின் அதிபராக்க ஆதரவளிக்கிறது.

3. எப்.டி.ஐ. கல்சல்டிங் – ஆட்சிக் கவிழ்ப் பிற்கான ஆலோசனைகளை வழங்குவதற்காக அழைக்கப்பட்ட அமெரிக்க நிறுவனம்

4. யு.எஸ்.ஏ.ஐ.டி. (யுஎஸ் எய்ட்) லத்தீன் அமெரிக்க நாடுகளுக்கு உதவும் அமெரிக்க நிறுவனம். இது ஒரு அமெரிக்க அரசு நிறுவனம். லத்தீன் அமெரிக்க நாடுகளில் இருக்கும் அரசுகளை கண்காணிப்பதற்காகவும், அமெரிக்க எதிர்ப்பு அரசுகளை கவிழ்க்கிற திட்டங்களை மறைமுக மாகத் தீட்டுவதற்காகவும் உருவாக்கப்பட்ட

அமைப்பிது. அதன் தலைவரான மார்க் இக்கூட்டத்தில் கலந்து கொண்டார்.

5. ஜே.ஜே. ரெண்டன் – லத்தீன் அமெரிக்க நாடுகளில் நடக்கிற தேர்தல்களில், அமெரிக்க ஆதரவு நபர்களை வெல்லவைக்க, அரசியல் தந்திரங்களையும் வியூகங்களையும் அமைக்கிற பணியினைச் செய்கிறவர்.

6. மரியா கொரினா – வெனிசுவேலாவின் எதிர்க்கட்சி எம்.பி.

7. ஜோலியோ போர்சஸ் – வெனிசுவேலாவின் எதிர்க்கட்சி எம்.பி. அக்கூட்டத்தில் விவாதிக்கப் பட்டவைகளையும் எடுக்கப்பட்ட முடிவுகளை யும் தொகுத்து அவர்கள் தயாரித்த இரகசிய ஆவணத்தின் சில பகுதிகள் கீழே: வெனிசுவேலாவில் நடந்து கொண்டிருக்கிற

ஆட்சியை மாற்ற, அந்நாட்டின் எதிர்கட்சியின ரோடு விவாதித்து தயாரிக்கப்பட்ட வியூகத் திட்டம் இது.

## செயல்திட்டம்

வெனிசுவேலா மக்களின் இன்றைய பிரச் சனைகளான உணவுப் பற்றாக்குறை, பொருள் கிடைக்காமை போன்றவற்றை பெரியளவில் மக்களிடையே கொண்டு சென்று, ஹென்றிக் கேப்ரைல்சின் எதிர்க்கட்சியினை வெற்றிபெறச் செய்வது.

மக்களின் அன்றாடத் தேவைகளை தடை செய்வதை தொடர்ந்து செய்வதோடு மட்டு மல்லாமல், அதிகப்படுத்தவும் வேண்டும். குறிப் பாக, மின்சாரம் கிடைக்காமல் செய்து, அரசின் இயலாமையாகவும், பொறுப்பற்ற தன்மையாக வும்

மக்களை உணரவைப்பது.

அமெரிக்க-வெனிசுவேலா உறவை ஆதரித்து பிரச்சாரம் செய்தால், தேவைப்படும்போது அமெரிக்க ஆதரவு அமைப்புகளை தலையிட வைக்க ஏதுவான சூழலை உருவாக்குவது.

நெருக்கடி நிலையினை வெனிசுவேலா தெருக் களில் கொண்டுவந்து, அதன்மூலம் கொலம்பிய அரசின் உதவியுடன் அமெரிக்க மற்றும் நேட்டோ படைகளை தலையிட வைக்க முயற்சிப்பது. வன்முறையை வெடிக்க வைத்து, அதன்மூலம் முடிந்தால் உயிரிழப்புகளையும் படுகாயங்களை யும் நிகழவைப்பது. தொடர் உண்ணாவிரதங்களை ஊக்குவிப் பது, மக்களை கூட்டங்கூட்டமாக தெருவில் போராடவைப்பது, பல்கலைக்கழகங்கள் மற்றும் இன்ன பிற அரசுத்துறைகளில் குழப்பங்கள் விளை விப்பது. இருக்கிற எல்லா வாய்ப்புகளையும், அமைப்பு

களையும் பயன்படுத்தி அரசுக்கு இழிவினை ஏற்படுத்தி, எதிர்க்கட்சிக்கு நம்பகத்தன்மையினை அதிகரிப்பது.

அமெரிக்காவின் உதவியோடு, வெனிசுவேலா அரசையும் அரசின் உயரதிகாரிகளையும் போதை மருந்து கடத்தலிலும், பணமோசடியிலும் ஈடு பட்டதாக செய்தி பரப்புவது.

அமெரிக்க ஆதரவு லத்தீன் அமெரிக்க நாடு களின் அரசுகளை வெனிசுவேலாவிற்கு எதிரான நிலையில் வைத்திருப்பது. வெனிசுவேலாவிற்கு ஆதரவாக இருக்கிற அர்ஜென்டினா, பிரேசில், பொலிவியா, ஈக்வடார், நிகாரகுவா போன்ற நாடுகளின் நன்மதிப்பை குறைத்து லத்தீன் அமெரிக்கா முழுவதிலும் பிரச் சாரம் மேற்கொள்வது. அடுத்தடுத்து வரும் தேர்தல்களில் பெரும் பாலான பதவிகளை எதிர்க்கட்சியினர் பிடிப் பதற்கு, எதிர்க்கட்சி வேட்பாளர்கள் அனை வருக்கும் மேலும் கூடுதலாக நிதி வழங்குவது.

எதிர்கட்சியினர்தான் மிகச்சிறந்த மாற்று என்கிற கருத்தைப் பரப்ப, ஒன்பது சர்வதேச ஊடகங்களின் பத்திரிகையாளர்களை ஏற்பாடு செய்வது, (பி.பி.சி., சி.என்.என்., நியூயார்க் டைம்ஸ், நியூயார்க் போஸ்ட், ரிவ்டர்ஸ், இஎப்இ, ஏ.பி., மியாமி ஹெரால்ட், டைம், எநாளைரஎநடடயய கிளாரின், ஏபிசி, ...). வெனிசுவேலா தலைநகரில் இருக்கும் அயல்நாட்டு ஊடக சங்கத்துடனும் தொடர்பு வைத்துக்கொள்வது.

வெனிசுவேலாவின் பொருளாதார நெருக்கடி குறித்து, சர்வதேச பொதுக்கருத்தை உருவாக்குவது. அமெரிக்காவிலிருக்கிற வெனிசுவேலா மற்றும் க்யூபாவிற்கு எதிரானவர்கள் அனைவரையும் ஒன்றிணைத்து வெனிசுவேலா அரசை வீழ்த்து கிற இவ்வியூகத்திட்டத்திற்கு உதவிகோருவது. முன்னாள் இராணுவத்தினர், அதிருப்தி இராணுவத்தினர் என இதற்கு ஆதவளிப்பதற்கு ஒரு பெரிய பட்டியலையே

தயாரித்து, ஒரு ஆயுதந்தாங்கிய இராணுவப்படையினை தயார்செய்து வைப்பது, தேவைப்படுகிறபோது அந்த இராணுவத்தை பயன்படுத்துவது அல்லது அந்நிய படைகளை அனுமதிக்க உதவப் பயன் படுத்துவது. அமெரிக்கா ஒரு சதிக் கூட்டணி அமைத்து இப்படியானதொரு திட்டத்தினை முன்வைத்தே வெனிசுவேலாவில் குழப்பம் விளைவித்துக் கொண்டிருக்கிறது. என்ன விலை கொடுத்தேனும் வெனிசுவேலாவை தனதாக்கிவிட வேண்டு மென்று வெனிசுவேலாவின் பெருமுதலாளிகள், எண்ணைக்காகக் காத்திருக்கும் அமெரிக்க ஏகாதிபத்திய அரசு, வெனிசுவேலாவின் முன்னாள் எண்ணை முதலாளிகள், பக்கத்து நாடான கொலம்பியாவின் அதிதீவிர வலதுசாரிகள், மற்றும் வெனிசுவேலாவின் அமெரிக்கத் தலை யாட்டி எதிர்க்கட்சிகள் – என்று ஒரு மிகப்பெரிய சுரண்டல் கூட்டணி காத்துக் கொண்டிருக்கிறது.

குழப்பம் விளைவித்து, ஆட்சிக் கவிழ்ப்பு நடத்தி, மக்களாட்சியினை மீண்டும் வராமல் பார்த்துக் கொள்கிற நடவடிக்கைகளில் இறங்கு வது அமெரிக்காவிற்கு ஒன்றும் புதிதல்ல. சிலி நாட்டு மக்களின் ஏகோபித்த ஆதரவுடன் தேர்தலில் வெற்றி பெற்று நல்லாட்சி புரிந்து கொண்டிருந்த அதிபர் சால்வடாரை 1973-ல் இதே போன்றதொரு குழப்பம் விளைவித்தே கொலை செய்து ஆட்சிக் கவிழ்ப்பையும் நிகழ்த் தியது அமெரிக்கா. இதன் விளைவாக 40 ஆண்டு களாகியும், இன்று வரையில் சிலி நாட்டில் நம்பிக்கை தரும் மக்கள் நலனில் அக்கறை கொண்ட அரசினை ஏற்படுத்த முடியாமலே போயிருக்கிறது என்பது குறிப்பிடத்தக்கது.

## 2014 இல் துவங்கிய எரிபொருள் விலை வீழ்ச்சி

2013-2014 ஆண்டுகளில் வெனிசுவேலாவுக்கு பாதகமான இரண்டு முக்கியமான, எதிர்பாராத,

அதிர்ச்சியான நிகழ்வுகள் நடந்தேறின. ஒன்று சாவேசின் மரணம், மற்றொன்று பல்வேறு சர்வதேச புறக்காரணிகளால் வீழ்ச்சியடையத் துவங்கிய எண்ணை விலை. 2012-2013 வரையிலும் ஒரு பேரல் 100 டாலருக்குக் குறையாமல் விற்றுக்கொண்டிருந்த ஒரு பேரல் எண்ணை, 30 டாலர் அளவுக்கு வீழ்ச்சியடைந்தது. வெனி சுவேலாவின் ஒட்டுமொத்த ஏற்றுமதியில் 98ரூ த்தையும், ஒட்டுமொத்த உள்நாட்டு உற்பத்தியில் 50ரூ த்திற்கு மேலும் ஆக்கிரமித்திருப்பது எண்ணை உற்பத்திதான். அதில் 80ரூ த்தை அப்படியே மக்கள் நலத் திட்டங்களுக்கு வெனிசுவேலா திருப்பியனுப்பி ஒட்டுமொத்த தேசத்தையும் ஒருசேர முன்னேற்றப் பாதையில் அழைத்துச் சென்று கொண்டிருந்த வேளையில், அந்த வருமானத்தில் மூன்றில் இரண்டு பங்கை இழக்க வேண்டி வந்ததால், வெனிசு வேலாவால் சமாளிக்கவே முடியவில்லை என்பது தான் உண்மை. உற்பத்திச் செலவைக் கூட சமாளிக்க

முடியாத நிலை வெனிசுவேலா அரசு எண்ணைத் தயாரிப்பு நிறுவனத்திற்கு ஏற்பட்டது.

எண்ணை ஏற்றுமதியை மட்டுமே பெரு மளவில் நம்பியிருக்கும் பொருளாதாரத்தைக் கொன்டிருக்கும் ஒரு நாட்டில், சர்வதேச கச்சா எண்ணையின் விலை வீழ்ச்சியடையும் போதெல் லாம், அந்நாட்டின் கடனின் அளவு கூடும். வெனிசுவேலாவிலும் அது நடந்து கொண்டிருக் கிறது. 1980களில் ஒருமுறை சர்வதேச சந்தையில் எண்ணை விலை குறைந்தபோதும், இதேபோன்று வெனிசுவேலாவில் நடந்திருக்கிறது.

இச்சூழலைப் பயன்படுத்திக்கொண்டு, வெனி சுவேலா மீது பல பொருளாதாரத் தடைகளை விதிக்க ஆரம்பித்துவிட்டது. அதனால் இரன்டு முக்கியமான பிரச்சனைகளில் வெனிசுவேலா சிக்கிகொன்டிருக்கிறது. ஒன்று, அமெரிக்காவுக்கோ அல்லது அமெரிக்கத் தொடர்பில் இருக்கும்

நாடுகளுக்கோ நேரடியாக பெட்ரோலை விற்க முடியாமல் போகிறது. அதற்கு சுற்றிவளைத்து சில தீர்வுகள் இருக்கிறபோதிலும், அப்படியாக பெட்ரோலை விற்பதற்கு, ஒரு பேரலுக்கு குறைந்தது 6 டாலராவது கூடுதலாக செலவா கிறது. அதனால் வெனிசுவேலா விற்கிற பெட் ரோலின் விலையும் கூடுகிறது. இதன்காரணமாக வெனிசுவேலாவின் பெட்ரோல் விற்பனையும் குறைகிறது. அதிலும் ஐஎஸ்ஐஎஸ் போன்ற பயங்கரவாத இயக்கங்களின் கட்டுப்பாட்டில் இருக்கும் எண்ணைக் கிணறுகளில் இருந்து கள்ள சந்தையில் விற்கப்படும் எண்ணையின் விலை பேரலுக்கு கிடைக்கும்போது, 6 டாலர் கூடுதலாக விற்கப்படும் வெனிசுவேலா பெட் ரோலை வாங்க முன்வரமாட்டார்கள் தானே. ஆக, சர்வதேச பெட்ரோல் விலையும் குறைந்து, வெனிசுவேலாவின் இலாபமும் குறைந்து, விற்பனை யும் குறைந்து போயிருக்கிறது. வெனிசுவேலாவின்

எண்ணை விற்பனையில் 40ரூ அளவிற்கு ஏற்கனவே முன் தேதியிட்டு எண்ணை வழங்குவதாக வாக் குறுதி வழங்கி கொடுக்கப்படுபவைதான். ஆக அதற்கான காசும் வந்து சேராது. 15,000 ரூபாய் மாத வருமானத்தில் வாழ்க்கையை ஓட்டும் ஒரு குடும்பத்தின் மாத வருமானம், திடீரென 5,000 ஆக மாறினால், என்னவாகும்? செலவை சமாளிக்க கடன் வாங்குவதும், அந்தக் கடனுக்கு வட்டி கட்ட மீண்டும் கடன்வாங்குவதும், அந்தக் கடனை அடைக்க மீண்டும் கடன் வாங்குவது மாகத் தானே இருப்போம். ஏறக்குறைய வெனிசு வேலாவும் அப்படியான சிக்கலில்தான் மாட்டிக் கொண்டிருக்கிறது. வேறு வருமானத்தை உருவாக்கு தற்கான அடிப்படைக் கட்டமைப்புகளை உருவாக்கிக் கொண்டிருந்த நேரத்தில் இப்படி யான பிரச்சனையை எதிர்கொள்வது கடினமான தாக இருக்கிறது வெனிசுவேலாவிற்கு.

ஒரு நாளைக்கு சராசரியாக 15 இலட்சம் பேரல்கள் வரையிலும் உற்பத்தி செய்து கொண்டிருந்த வெனிசுவேலா, அமெரிக்காவின் பொருளாதாரத் தடைக்குப் பின்னர் 9 இலட்சம் பேரல்கள் அளவுக்கே உற்பத்தி செய்ய முடிகிறது. அதுமட்டுமில்லாமல் தனக்கு அருகாமையில் இருக்கும் நாடுகளுக்குக் கூட சுதந்திரமாக விற்பனை செய்யமுடியாத காரணத்தில் வெகுதூரத்தில் இருக்கும் ஆசிய கண்டத்து நாடுகளுக்குத் தான் ஏற்றுமதி செய்யவேண்டிய கட்டாயத்திற்கும் தள்ளப்பட்டிருக்கிறது. 2019 இல் இதுவரையில் உற்பத்தி செய்யப்பட்ட கச்சா எண்ணையில் 70ரு அளவிற்கு ஆசியாவிற்குத்தான் விற்றிருக்கிறது.

கடந்த மார்ச் மாதத்தில் ஒரு நாளைக்கு 10 இலட்சம் பேரல்கள் (கடந்த காலங்களில் 20 இலட்சத்திற்கும் அதிகமான பேரல்கள்) வரையி லும் உற்பத்தி

செய்ய வேண்டிய ஒப்பந்தங்கள் கிடைத்திருந்தும், அமெரிக்காவின் அழுத்தம் காரணமாக சில நாடுகள் பின்வாங்கியிருக்கின் றன. அதனால் உற்பத்தியும் விற்பனையும் தொடர்ந்து குறைந்துகொண்டே தான் இருக்கின்றன.

## தென்னமெரிக்காவில் புதிய வலதுசாரி அரசுகளின் உருவாக்கம்

ஒரு நிலப்பரப்பில் வாழும் மக்களையும் இயற்கை வளங்களையும் எவ்வளவு முடியுமோ அந்தளவிற்கு சுரண்டி, திவாலாக்கிவிட்ட பின்னர் அங்கிருந்து தனது மூலதனத்தையும் அதுவரை பெற்ற இலாபத்தையும் அள்ளிக் கொண்டு வேறெங்காவது நகர்ந்துவிடும் முதலாளித்துவம். பின்னர் அதனை சரிசெய்வதற்கு மாற்று சக்தி களும் முற்போக்கு அமைப்புகளும் இடதுசாரி களும் அரும்பாடுபட்டு அத்தேசத்தையும் அதன் மக்களையும் கொஞ்சம்

கொஞ்சமாக இயல்பான வாழ்க்கைக்கு மீட்டெடுத்து வரும் பணியினை மேற்கொள்வார்கள். ஓரளவுக்கு அத்தேசம் எழுந்து நிற்கிற தருவாயில், மீண்டும் சுரண்டு வதற்கு முதலாளித்துவம் வண்டிபிடித்து சரியான நேரத்திற்கு வந்து சேரும். இதனை தென்னமெரிக்க நாடுகளின் வரலாற்றை உற்று நோக்கினாலே விளங்கிக்கொள்ளலாம்.

கடுமையான நிதிநெருக்கடிகளை உருவாக்கி விட்டு அர்ஜன்டைனா, ஈக்வடார், வெனிசுவெலா என பல நாடுகளிலிருந்து காலங்காலமாக சுரண்டியவர்கள் இரவோடு இரவாக தப்பித்து ஓடிவிட்டு, நிலைமை ஓரளவுக்கு சீரானதும் மீண்டும் புதிய பெயர்களாகவும் புதிய கட்சிகளா கவும் திரும்ப வந்துகொண்டிருக்கின்றனர்.

2002 முதல் 2014-ம் ஆண்டு வரையிலான 12 ஆண்டுகளில் மட்டும் தென்னமெரிக்க நாடுகளில்

7 கோடி மக்களை வறுமையிலிருந்து மீட்டெடுத்து இயல்பான நடுத்தர வாழ்க்கைக்கு கொண்டு வந்தது அக்காலகட்டத்தில் ஆட்சி செய்து வந்த தென்னமெரிக்க இடதுசாரி அரசுகள்தான். அவர்களில் பிரேசிலில் மட்டுமே 3 கோடி பேரின் வறுமை ஒழிக்கப்பட்டிருக்கிறது. அப்படிப்பட்ட பிரேசிலில் சமீபத்தில் அதிதீவிர வலதுசாரியான பொல் சோனாரோ சமீபத்திய தேர்தலில் அமோ கமாக வென்று பிரேசிலின் அதிபராகியிருக்கிறார். இராணுவத்தைப் பயன்படுத்தி மக்களை அடக்கி ஒடுக்கி வைப்பதை ஆதரித்துப் பேசிவருபவர் அவர். இடதுசாரிகள் ஆட்சிக்கு வருவதற்கு முன்பிருந்த இராணுவ ஆட்சியையும் அப்போது நடத்தப்பட்ட சித்தரவதைகளையும் கூட பாராட்டிப் பேசுகிறார். தென்னமெரிக்காவின் ஒட்டுமொத்த நிலப்பரப்பில் பாதிக்கும் மேலான பகுதிகளை உள்ளடக்கிய தேசம் பிரேசில். அதிலும் வெனிசுவேலாவோடு 2,199 கிலோ மீட்டர் நீண்ட

எல்லையைக் கொண்டிருக்கும் நாடும் கூட.

வெனிசுவேலாவுடன் *2,219* கிலோமீட்டர் அளவிற்கான எல்லையைக் கொண்டிருக்கும் கொலம்பியாவும் வெனிசுவேலாவில் குழப்பம் விளைவிக்க உதவும் நாடாக இருந்துவருகிறது. *1998*-ல் சாவேஸ் ஆட்சியைப் பிடித்த அதே வேளையில், கொலம்பியாவுடன் அமெரிக்கா ஒரு ஒப்பந்தம் தயாரிக்கப்பட்டது. "ப்ளான் கொலம்பியா" என்கிற பெயரில் துவக்கப்பட்ட அத்திட்டத்தின் மூலம் போதைப்பொருள் கடத் தலைத் தடுக்க கொலம்பியாவுக்கு அமெரிக்கா உதவும் என்பதுதான் ஒப்பந்தம். *2000*-ம் ஆண்டில் அதற்கு அதிகாரப்பூர்வமாக அமெரிக்க காங்கிர சின் அனுமதியும் கிடைத்துவிடுகிறது. உடனே *500* அமெரிக்க இராணுவப்படையினரும் *300* அமெரிக்க ஒப்பந்தப் படையினரும் கொலம்

பியாவிற்குள் நுழைந்தனர். அதுவே 2004-ல் 800 அமெரிக்க இராணுவப்படையினராகவும் 600 ஒப்பந்தக்காரர்களாகவும் அதிகரித்தது. ஆனால் அதேகாலகட்டத்தில் கொலம்பியா வழியாக அமெரிக்காவிற்கு கடத்தப்பட்ட போதைப்பொருளின் அளவும் குறையாமல் அதிகரித்துக்கொண்டே தான் இருந்தது. ஆனால் கொலம்பிய அரசுகள் இதனைக் கண்டுகொள்ளாமல் இருப்பதற்கு, உதவி என்கிற பெயரில் கோடிக்கணக்கில் கொலம்பியாவுக்கு அமெரிக்கா வாரி இறைத்த தும் ஒரு முக்கியமான காரணம்.

அமெரிக்காவைப் பொருத்தவரையில் கொலம் பியாவில் இராணுவ தளவாடம் அமைத்தால், அதற்கு அருகிலிருக்கும் வெனிசுவேலா, ஈக்வடார், ப்ரேசில் போன்ற இடதுசாரிகள் ஆட்சி செய்யும் நாடுகளுக்கு தொடர்ந்து நெருக்கடி கொடுக்க வும்,

தேவைப்பட்டால் ஆட்சியைக் கவிழ்க்கவும் முடியும் என்பதாலேயே எவ்வளவு செலவு செய் தாலும் கொலம்பியாவை மட்டும் தன் கட்டுப் பாட்டில் வைத்துகொண்டே இருக்க விரும்பியது அமெரிக்கா. வழக்கம்போல உலகின் எந்தப் பகுதிக்குச் சென்றாலும், அட்டூழியங்கள் நிகழ்த் தும் அமெரிக்க இராணுவம் கொலம்பியாவை யும் விட்டுவைக்க வில்லை. 2003-2007 வரை யிலான ஆண்டுகளில் நடத்தப்பட்ட ஆய்வின் படி, கொலம்பியாவில் அமெரிக்க இராணுவப் படையினர் 54 சிறுமிகளை பாலியல் வன்புணர்வு செய்தது கண்டுபிடிக்கப்பட்டது. இதுதவிர அமெரிக்க இராணுவப்படையினர் இருக்கும் பகுதிகளில் வாழும் பெண்களை கட்டாயப் படுத்தி பாலியல் தொழில் செய்ய வைத்திருப் பதாக மனித உரிமை ஆர்வலர்களின் ஆய்வுகளும் தெரிவிக்கின்றன. இன்றைக்கு வெனிசுவேலா குறித்து எதிர்மறையான செய்திகளை வெளியிட் டுக் கொண்டே இருக்கிற சர்வதேச

ஊடகங்கள், அமெரிக்கப் படைகள் குடியிருக்கும் கொலம் பியாவில் தான் உலகிலேயே சிரியா, சூடான் நாடுகளுக்கு அடுத்தபடியாக அதிகப்படியாக, 50 இலட்சம் மக்களுக்கும் மேல் உள்நாட்டு அகதிகளாக தங்கள் வாழ்விடங்களைவிட்டு வெளியேறி வாழும் நிலைக்குத் தள்ளப்பட்டிருக் கிறார்கள் என்பதை மறைக்கின்றன. ப்ரேசிலில் வலதுசாரிகள் ஆட்சிக்கு வந்ததும், ஈக்வடாரில் ரஃபேல் கொரேயா என்கிற இடதுசாரி அதிபருக்கு அடுத்ததாக அதிபராகியிருக்கும் மொரானோ மேற்குலகிற்கு எதிராகப் பேசாத போக்கினைக் கடைப்பிடிப்பதாலும், கொலம்பியாவில் இருக் கும் அமெரிக்கப் படையினருக்கும் வெனிசு வேலா ஒன்றுதான் வேலை என்றாகிவிட்டது.

அதனால் கொலம்பியா-வெனிசுவேலா எல்லை யில் குழப்பம் விளைவிப்பது, பெட்ரோலிய பொருட்களின் கள்ள சந்தையை உருவாக்குவது,

போலி பொலிவார் பண நோட்டுகளை அச்சிட்டு உள்ளே இறக்குவது, வெனிசுவேலாவின் இறக்கு மதியில் கைவைப்பது, வெனிசுவேலா சந்தையில் பொருட்களை மொத்தமாக வாங்கி தட்டுப்பாடு களை உருவாக்குவது என தொடர்ந்து கொலம் பியா வழியாகவே அமெரிக்கா அனைத்தையும் சாதித்துக் கொள்கிறது.

அதேபோல 2008-ல் தென்னமெரிக்க நாடு களின் கூட்டமைப்பை வெனிசுவேலாவின் சாவேஸ், ஈக்வடாரின் ரஃபேல் கொரேயா, பொலிவியா வின் இவா மொரால்ஸ் உள்ளிட்டோர் இணைந்து உருவாக்கினர். பன்னிரண்டு தென்னமெரிக்க நாடுகள் அதில் இணைந்திருந்தன. கடந்து சில ஆண்டுகளாக தென்னமெரிக்காவில் ஆட்சிக்கு வந்துகொண்டிருக்கும் வலதுசாரிகள், அந்த கூட்டமைப்பையே இல்லாமல் செய்யும் முயற் சியாக, ப்ரோசூர் (தென்னமெரிக்க

முன்னேற்றம் மற்றும் வளர்ச்சிக்கான அமைப்பு) என்கிற அமைப்பை உருவாக்கியிருக்கின்றன. ப்ரேசில், ஈக்வடார், சிலி, அர்ஜன்டைனா, கொலம்பியா, பராகுவே, உருகுவே மற்றும் கயானா ஆகிய எட்டு நாடுகள் இணைந்திருக்கின்றன. வெனிசுவேலா அங்கம் வகித்த தென்னமெரிக்க நாடுகளின் கூட்டமைப்பின் தலைமைக் கட்டிடத்தையே காலி செய்துவிட்டு வெளியேறுமாறு ஈக்வடார் அதிபர் மொரானோ கட்டளையிட்டிருக்கிறார்.

## இறுதியாக...

வெனிசுவேலாவுக்கு பெட்ரோலை விற்க வேண்டும்; சீனாவுக்கோ அதிகமாக பெட்ரோல் வேண்டும். ஆக வெனிசுவேலாவுக்கு எந்தக் கேள்வியும் கேட்காமல் சீனா பண உதவி செய்து வருகிறது. அதற்கு பதிலாக வெனிசுவேலாவும் பெட்ரோல் அனுப்பி வைக்கிறது. சீனாவுக்கு சென்று சேர்கிற பெட்ரோலை

நிறுத்தினாலே சீனாவின் வளர்ச்சியை நிறுத்திவிடலாம் என்று நினைக்கிற அமெரிக்கா, சீனாவுக்கு பெட்ரோல் வழங்குகிற ஒவ்வொரு நாட்டையும் குறிவைக் கிறது. அதன் ஒரு அம்சமாகத்தான் ஈரானுடன் போர் தொடுக்கவும், வெனிசுவேலாவின் மதுரோ வின் ஆட்சியைக் கவிழ்க்கவும், சீனாவுக்கு பெட்ரோல் கொண்டுசெல்லும் கப்பல்களின் பாதையில் இருக்கும் இலங்கையில் நுழைந்து இராணுவத் தளவாடத்தை அமைக்கவும் அமெரிக்கா துடி யாகத் துடித்துக் கொண்டிருக்கிறது.

அதிலும் வெனிசுவேலாவில் மட்டுமே தேர் தலின் மூலமாக ஆட்சியைப் பிடிக்க அமெரிக்கா விரும்பவில்லை. அமெரிக்கா நினைத்தால் இன்றைய தேதிக்கு அங்கே தேர்தலின் மூலமே மதுரோவின் ஆட்சியை எதிர்க்கட்சியின் வசம் கொண்டு சேர்த்துவிடமுடியும். ஏனெனில், ஏற்கனவே

வெனிசுவேலா நாடாளுமன்றத்தில் மதுரோவின் கட்சி பெரும்பான்மையை 2015-ல் நடந்த தேர்தலில் இழந்துவிட்டது. ஆனால், மக்கள் நல சட்டங்களும் அரசியலமைப்பும் இருக்கிற இதே கட்டமைப்பில் ஆட்சியைப் பிடித்தால் அது பெரியளவுக்கு நன்மை தராது என்பதால், சாவேஸ் வருகைக்கு முன்பிருந்ததைப் போன்ற வெனிசுவேலாவை உருவாக்கி அதில் தான் ஆட்சியமைக்க வேண்டும் என்பதே அமெரிக்காவின் திட்டமாக இருக்கிறது. அப்போதுதான் இனி ஒருபோதும் சோசலிசம் பேசுபவர்களின் அரசு உருவாகாமல் தடுக்கமுடியும் என்பதை அமெரிக்கா நன்றாகவே உணர்ந்திருக்கிறது. அதற்காகத்தான் அவ்வப்போது சதிசெயல் களை முடுக்கிவிட்டுக் கொண்டே இருக்கிறது.

வெனிசுவேலாவைப் பொருத்தவரையில் 95ரு ஏற்றுமதியான பெட்ரோலிய உற்பத்தியைத்

தவிர மற்ற துறைகளையும் அதிவேகமாக மக்கள் பங் களிப்புடன் வளர்த்தெடுக்க வேண்டும் என்றா லும், இன்றைக்கு இருக்கிற மிகநெருக்கடியான சூழலிலிருந்து மீண்டு வருவதற்கு முதலில் எண்ணை உற்பத்தியில் இருக்கும் பிரச்சனைகளைத் தீர்க்க வேண்டும். அமெரிக்கா விதித்திருக்கிற தடை களை உடைத்தோ, தாண்டிச் சென்றோதான் அதனை சாதிக்க முடியும். எப்போதும் காலங் காலமாக அமெரிக்க டாலரின் மூலமாகவே நடைபெற்றுவரும் எண்ணை விற்பனையை வேறு நாணயத்தில் செய்ய வேண்டும். அதன் ஒரு முயற் சியாகவே பெட்ரோஸ் என்கிற நாணயத்தை உருவாக்குவதாக மதுரோ சமீத்தில் அறிவித்தார். அமெரிக்கா விதித்துள்ள பொருளாதாரத் தடை களை ஒன்றுமில்லாமல் செய்திடலும் வேண்டும்.

தென்னமெரிக்க நாடுகளின் கூட்டமைப்பை அழித்து அரசியல் மற்றும் பொருளாதார நெருக்

கடியையும், கொலம்பியா வழியாக பயங்கரவாத மற்றும் இராணுவ நெருக்கடியையும், பொருளா தாரத் தடைகளைத் திணித்து சர்வதேச ஏற்றுமதி - இறக்குமதிகளை தடுத்து கடன்சுமையை ஏற்றிய நெருக்கடியையும், உள்நாட்டிலேயே அதிதீவிர வலதுசாரிகளுக்கு பணமாகவும் ஆயுதமாகவும் கொடுக்கிற நெருக்கடியையும் வெனிசுவேலாவின் மக்கள் ஒருங்கிணைந்து தங்களின் சக்திக்கேற்ப குரல் கொடுத்து எதிர்த்துக் கொண்டே இருக் கிறார்கள்.

உலகிலேயே அதிகமான எண்ணை வளத்தைக் கொண்டிருக்கிற நாடான வெனிசுவேலாவை தனக்கு ஆதரவான நாடாக மாற்றிவிட்டால், அதன்பிறகு தென்னமெரிக்கா முழுவதையும் தன் கட்டுப்பாட்டிலேயே வைத்துக்கொள்ளலாம் என்பதும் அமெரிக்காவின் கனவு. வெனிசுவேலாவை அவர்களிடம் காவு கொடுப்பதன்மூலம், அங்கே

இலவசமாகவும் எல்லொருக்கும் சமமாகவும் கிடைக்கத் துவங்கியிருக்கிற கல்வியும் மருத்துவ மும் இன்னபிற அத்தியாவசிய வசதிகளும் பறிக் கப்பட்டுவிடும். எண்ணைக் கிணறுகள் அனைத் தும் வெனிசுவேலாவுக்கு சற்றும் தொடர் பில்லாத பன்னாட்டு நிறுவனங்களின் கைகளுக்குச் சென்று விடும். அதனை முறியடிப்பதும், சர்வதேச நேச சக்திகளைத் திரட்டி அமெரிக்க ஏகாதிபத்தியத் தின் திமிர்த்தனைத்தை வளரவிடாமல் தடுப்ப தும் உலகின் குடிமக்களாகிய நம் ஒவ்வொரு வரின் கடமையுமாகும்....

# 3. இட ஒதுக்கீடு:

## சிபிஐ(எம்) அணுகுமுறை

கே. பாலகிருஷ்ணன்

தமிழகத்தில் மாநில கல்வி மற்றும் வேலை வாய்ப்புகளில் 69 சதவீத இடஒதுக்கீடு நீண்ட காலமாக அமலில் உள்ளது. கிட்டத்தட்ட 95 சதவீத மக்கள் இடஒதுக்கீடு வரம்புக்குள் கொண்டு வரப்பட்டுள்ளனர். ஆனால் இதர மாநிலங்களில் இத்தகைய நிலைமை இல்லை. சரிபாதிக்கும் மேற்பட்ட மக்கள் சில மாநிலங்களில் இட ஒதுக்கீடு சலுகை பெறும் வரம்புக்கு வெளியில் உள்ளனர். எனவே, இம்மாநிலங்களில் தங்களுக் கும் இட ஒதுக்கீடு சலுகை வேண்டுமென அவர் கள் கோருவது தவிர்க்க இயலாத ஒன்றாகும்.

தமிழகத்தில் மாநில அரசின் பிற்படுத்தப்பட்டோர் பட்டியலில் 252 சாதிகள் இடம்பெற்றுள்ளன. ஆனால் மத்திய அரசு கல்வி மற்றும் வேலை வாய்ப்புகளில் தீர்மானிக்கப்பட்டுள்ள 27 சதவீத இட ஒதுக்கீட்டை பெறுவதற்கான பிற்படுத்தப் பட்டோர் சாதியில் 181 சாதிகள் மட்டுமே இடம் பெற்றுள்ளன. இதில் விடுபட்டுள்ள 71 சாதி களைச் சேர்ந்த பிற்படுத்தப்பட்ட மக்கள் மத்திய அரசின் கல்வி மற்றும் வேலைவாய்ப்புகளில் இட ஒதுக்கீடு பெறும் வாய்ப்பு தற்போது இல்லை. பொருளாதாரத்தில் பின் தங்கிய இதர பிரிவினருக்கு 10 சதவீத இட ஒதுக்கீடு சட்டம் நிறைவேற்றப் பட்டதன் மூலம் இவர்களுக்கு மத்திய அரசு கல்வி மற்றும் வேலைவாய்ப்புகளில் சலுகை பெற இப்போது வாய்ப்பு ஏற்பட்டுள்ளது.

## தனியார் மயம்

அதுமட்டுமின்றி, அரசு நிறுவனங்கள், பொதுத்

துறை நிறுவனங்கள் நாளுக்குநாள் மூடப் பட்டோ, தனியார் மயமாக்கப்பட்டோ வரு கின்றன. இருக்கும் நிறுவனங்களிலும் வேலை வாய்ப்புகள் குறைக்கப்படுகின்றன. 2018-ம் ஆண்டு டிசம்பர் கணக்கெடுப்பின்படி மோடி ஆட்சியில் ஒரே ஆண்டில் சுமார் 1 கோடியே 10 லட்சம் வேலைவாய்ப்புகள் பறிக்கப்பட்டன என இந்தியப் பொருளாதார கண்காணிப்பு மையம் (ஊஆஐநு) தெரிவித்தது. மத்திய-மாநில அரசுகளால் அமலாக் கப்படும் தனியார் மயம், தாராளமயக் கொள்கை களால் இடஒதுக்கீடு நீர்த்துப் போகும் ஆபத்து ஏற்பட்டுள்ளது. மொத்தம் உள்ள வேலைவாய்ப்பு களில் தோராயமான கணக்குப்படி 85 சதவீதம் தனியார் நிறுவனங்களிலும், 15 சதவீதம் மட்டுமே அரசு மற்றும் பொதுத்துறை நிறுவனங்களில் உள்ளன. நிரந்தரப் பணிகளை வெளிநிறுவனங் களைக் கொண்டு செய்விப்பதன் விளைவாக (அவுட்சோர்சிங்) அவையும் நாளுக்கு நாள் குறைந்து கொண்டே

வருகின்றன.

இந்நிலையில் தனியார் துறைக்கும் இட ஒதுக் கீட்டு கோட்பாட்டை விரிவுபடுத்த வேண்டுமென மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி நீண்ட காலமாகவே வற்புறுத்தி வருகிறது. நாடாளுமன்றத்தில் இம்ம சோதா விவாதத்திற்கு வந்தபோது மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் நாடாளுமன்ற உறுப்பினர் கள் (மக்களவையிலும், மாநிலங்களவையிலும்) அனைத்துப் பிரிவினருக்கும் தனியார் துறையில் கல்வி மற்றும் வேலை வாய்ப்புக்கான இட ஒதுக் கீட்டினை விரிவாக்க வேண்டுமென சட்டத் திருத்தத்தை முன்மொழிந்தனர். ஆனால் மோடி அரசு அதை நிராகரித்து விட்டது. இட ஒதுக்கீட்டிற்கு உண்மையான ஆபத்து தனியார்மய, தாராளமயக் கொள்கைகளால் தான் ஏற்பட்டுள்ளது. இதிலிருந்து இடஒதுக் கீட்டு கோட்பாட்டை பாதுகாக்க வேண்டுமெனில்,

தனியார் தொழில் மற்றும் கல்வி நிறுவனங்களில் இட ஒதுக்கீட்டை விரிவுபடுத்துவதற்கான சட்டத் திருத்தத்தை நாடாளுமன்றத்தில் நிறைவேற்று வது அவசர, அவசியமானதாகும். இதற்கு அனைத்து ஜனநாயக, முற்போக்கு சக்திகளும் இணைந்து குரல் கொடுப்பது காலத்தின் தேவையாகும்.

## நிலக்குவியல்

இடஒதுக்கீடு பிரச்சனை குறித்து விவாதிக்கும் போது சாதிகள் குறித்தும் அதற்கு அடிப்படை யாக உள்ள நிலவுடைமை குறித்தும் ஆழ்ந்து பரிசீலிக்க வேண்டும் என்பதே மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி கட்சியின் நிலைப்பாடாகும். நீடித்து வரும் வேலையின்மை, வறுமை, பசி, பட்டினி போன்ற அனைத்து சமூகச் சீர்கேடுகளுக் கும் அடிப்படையான காரணம் விடுதலைக்குப் பிறகும் பல பத்தாண்டுகளாக நீடித்து வரும் நிலக்குவியலே ஆகும். இந்த நிலக்

குவியலை உடைத்து நிலமற்றோர் அனைவருக்கும் நிலவிநி யோகம் செய்வதன் மூலம் மட்டுமே வேலையின் மைக்கு முடிவு கட்ட முடியும். அதாவது நிலமற்ற அனைவருக்கும் நிலவிநியோகம் செய்து அவர் களது வருவாய்க்கு வழி செய்வதன் மூலம் இம்மக்களின் வாங்கும் சக்தியை உயர்த்த முடி யும். மக்களின் வாங்கும் சக்தி உயரும்போது பொருட்கள் உற்பத்தி, விற்பனை, அதனால் ஏற்படும் தொழில்வளர்ச்சி ஆகியவற்றின் மூலம் சமூக முன்னேற்றத்திற்கு வழியேற்படும்.

இதையே மண்டல் கமிஷன் ''தீவிரமான நிலச் சீர்திருத்தம், கிராமப்புற பொருளாதார மறுசீர மைப்பு, பூதான இயக்கம், கால்நடை மற்றும் பால் பண்ணை வளர்ச்சி உள்ளிட்டவைகளை மேற்கொள்ள வேண்டும்''என்று சொன்னதோடு''நிலச்சீர்திருத் தத்தின் மூலம் இன்றைய நிலவுடைமைகளை மாற்றாமல் உண்மையான சமூகநீதி கிடைக்காது'' எனவும் தனது

அறிக்கையில் குறிப்பிட்டிருந்தது. ஆனால் இந்த மையமான பிரச்சனையை கையில் எடுக்க அன்றும் இன்றும் உள்ள ஆட்சியாளர் கள் முன்வரவில்லை என்பதே உண்மை.

## இடதுசாரி அரசுகள்

இந்த நிலச்சீர்திருத்தத்தை அடிநாதமாகக் கொண்டே 1957-ம் ஆண்டில் தோழர் இ.எம்.எஸ். தலைமையிலான இடதுசாரி அரசில் தொடங்கி இன்று வரை கேரளா, மேற்குவங்கம், திரிபுரா ஆகிய மூன்று மாநிலங்களிலும் ஆட்சிக்கு வந்த இடதுசாரி அரசுகள் நிலச்சீர்திருத்த நடவடிக் கைகளை மேற்கொண்டன. இதன் மூலம் இந்தியாவில் அடையாளம் காணப்பட்ட உபரி நிலங்களில் கேரளாவில் 70,834 ஏக்கர் 1,68,912 பயனாளிகளுக்கும், மேற்கு வங்கத்தில் 10,52,269 ஏக்கர் 31,37,662 பயனாளிகளுக்கும், திரிபுராவில் 1,599 ஏக்கர் 1,424 பயனாளிகளுக்கும் விநியோகிக் கப்பட்டுள்ளது.

*நாடு தழுவிய அளவில் உபரியாக அறிவிக்கப்பட்ட நிலங்களில் 21 சதவீத நிலம் மேற்குவங்கத்தில்தான் அறிவிக்கப்பட்டது. இந்தியா முழுவதும் இவ்வாறு நிலம் பெற்ற பயனாளி களில் 54.2 சதவீதம் பேர் மேற்கு வங்கத்தில்தான் உள்ளனர் என்பதும் மேற்கு வங்க இடது முன்னணி அரசின் முனைப்பையும் செயல்பாட்டையும் எடுத்துக்காட்டுவதாக அமைகிறது. (இது 2011-ம் ஆண்டு மக்கள்தொகைக் கணக்கெடுப்பின் புள்ளி விவரங்கள்)*

*தமிழ்நாட்டில் நில உச்சவரம்பு சட்டம் நிறை வேற்றப்பட்டபோது 20 லட்சம் ஏக்கர் நிலம் உபரியாக இருக்கும் என மதிப்பிடப்பட்டது. ஆனால் கடந்த 60 ஆண்டுகளில் விநியோகம் செய்யப்பட்ட மொத்த உபரி நிலம் 1.90 லட்சம் ஏக்கர் மட்டுமே. மண்டல் கமிஷன் சுட்டிக் காட்டிய உண்மையான சமூக நீதிக்கான நில விநியோகம் செய்யப்பட்ட லட்சணம் இதுவே.*

*உண்மையான சமூகநீதி*

இடஒதுக்கீடு பிரச்சனையில் தீவிரம் காட்டும் கட்சிகளும் இம்மக்களுக்கு நிலவிநியோகம் செய்ய வேண்டும் என்பதை மறந்தும்கூட வற்புறுத்து வதில்லை. ஆனால் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி கிராமப்புற நிலவுடைமையில் மாற்றம் ஏற்படுத்துவதன் மூலமே தாழ்த்தப்பட்ட, பிற் படுத்தப்பட்ட மக்களுக்கு வேலைவாய்ப்பை உறுதி செய்வதன் மூலம் உண்மையான சமூகநீதி கிடைக்கும் என்பதை தொடர்ந்து வலியுறுத்தி வருகிறது. நிலப்பிரபுக்கள் மற்றும் பெரும் தொழிலதிபர் களிடம் உள்ள நிலங்களை பறிமுதல் செய்து நிலமற்றோருக்கு விநியோகம் செய்வது விவசாயப் புரட்சியின் அடிப்படைக் கடமைகளோடு தொடர்புடையதாகும். இதை சட்டம் மற்றும் நீதிமன்றங்களின் மூலம் மட்டுமே நடத்துவது சாத்தியமில்லை. இத்தகைய விவசாயப் புரட்சியை வெற்றிகரமாக நடத்துவதன் மூலம் மட்டுமே

நிலப்பிரபுக்கள், பெரும் தொழிலதிபர்கள், கந்து வட்டிக் கும்பல்கள் ஆகியோரின் கோரப்பிடியி லிருந்து தாழ்த்தப்பட்ட, பழங்குடி, பிற்படுத்தப் பட்ட உழைப்பாளி மக்களை விடுவிக்க முடியும். இவர்கள் காலம் காலமாக அனுபவித்து வரும் அனைத்துக் கொடுமைகளுக்கும் முடிவு கட்ட முடியும். இதைத் தவிர இதற்கு மாற்று வழி கிடையாது என்பதே மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் திட்டவட்டமான முடிவாகும்.

### மக்கள் ஒற்றுமை

விவசாயப் புரட்சியை வெற்றிகரமாக நடத்தி முடிக்க வேண்டுமெனில் தாழ்த்தப்பட்ட, பழங் குடி, பிற்படுத்தப்பட்ட மக்களது ஒற்றுமை மட்டுமல்லாது இதர சாதிகளைச் சேர்ந்த உழைப் பாளி மக்களின் ஒற்றுமையும் அவசியமானதாகும். சமூகத்தில் உள்ள அனைத்து உழைப்பாளி மக்களின் போர்க்குணமிக்க

வர்க்க ஒற்றுமையை உருவாக்குவது என்பதே மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி மேற்கொண்டுள்ள நீண்ட பயணத்தின் குறிக்கோளாகும்.

ஆனால் உழைப்பாளி மக்களை முற்பட்டோர், பிற்படுத்தப்பட்டோர் என பல அரசியல் கட்சிகள் தேர்தல் ஆதாயத்திற்காக பிளவுபடுத்துவது இம்மக்களின் நலன்களுக்கு விரோதமானதாகும் என்பதையும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி அழுத்தமாக சுட்டிக்காட்டி வந்துள்ளது. ஒரு பக்கம் தாழ்த்தப்பட்ட, பிற்படுத்தப்பட்ட மற்றும் பழங்குடி மக்களுக்கு இட ஒதுக்கீட்டு கொள்கை யினை கண்டிப்பாக அமலாக்க வேண்டும் என வற்புறுத்தும் அதே நேரத்தில், இதர சாதிகளில் உள்ள உழைப்பாளிகள் மற்றும் ஏழை மக்களுக் கும் ஒரு குறிப்பிட்ட சதவீத இட ஒதுக்கீடு வழங்க வேண்டுமென நீண்டகாலமாகவே மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி கோரி வருவது

மேற்கண்ட விவசாயப் புரட்சியை வெற்றிகரமாக நடத்திட வேண்டுமெனில் அனைத்து உழைப்பாளி மக்களின் வர்க்க ஒற்றுமை பலப்படுத்தப்பட வேண்டும் என்ற நோக்கத்தோடு மேற்கொள்ளப்படும் அணுகு முறையே ஆகும்.

# 4. இந்தியாவில் வேலையின்மை நெருக்கடி

வெங்கடேஷ் ஆத்ரேயா

முதலாளித்துவ அமைப்பிற்கு முந்தைய சமூகங்களில் பொதுவாக கூலி உழைப்பு என்பது கிடையாது. எனவே பகிரங்கமாக வேலை தேடித் திரியும் வேலையில்லா பட்டாளங்களும் கிடை யாது. இதன் பொருள் அச்சமூகங்களில் மனித உழைப்பு என்ற உற்பத்திக்கான வளம் முழுமை யாக பயன்பட்டது என்பதல்ல. அவரவர்கள் சுய தொழில் செய்துவந்த நிலையில் லாப வேட்டை யாலும் போட்டியாலும் உந்தப்படாத சூழலில் உழைக்கும் அளவும் நேரமும் பல்வேறு தொழில் களுக்கு இடையேயும் பருவங்கள் சார்ந்தும் வேறு பல காரணங்களாலும் சமூகத்தில் ஒரே சீராக இருந்ததில்லை. உற்பத்தி சக்திகளின் அளவு குறை வாகவும் அவற்றின் வளர்ச்சி மெதுவானதாகவும்

இருந்த அச்சமூகங்களில் சராசரி உழைப்பு நேர மும் குறைவாக இருந்திருக்க வாய்ப்பில்லை. குடும்பங்கள் தம்மை மறு உற்பத்தி செய்து கொள் வதற்கு தங்கள் உழைப்பை அதிகம் செலுத்த வேண்டிய நிர்ப்பந்தத்தில் இருந்தனர். (விதிவிலக்கு சுரண்டும் வர்க்கத்தினர் – பிறர் உழைப்பில் சுகபோக மாக வாழ்ந்துவந்த எஜமானர்களும் நிலப்பிரபுக் களும் அரச குடும்பங்களும் அவர்களது அடிவருடி களும்)

முதலாளித்துவத்திற்கு முந்தைய சமூகங்களில் உழைப்போர் ஒருபுறம் கடுமையாக சுரண்டப் பட்டாலும் அவர்களது உழைப்பு நேரத்தின் மீதும் உழைப்பு சக்தியின் மீதும் அவர்களுக்கு முழு உரிமை மறுக்கப்பட்ட போதிலும் அவர் களுக்கான அடிப்படை ஜீவாதார உத்தரவாதங் கள் இருந்தன. இவை இன்றைய நிலையில் இருந்து காணும்பொழுது மிகத் தாழ்வான வாழ்க்கை நிலையைத்தான் தந்தன என்றாலும்,

முதலாளித்துவத்திற்கு முந்தைய காலங்களில் உழைக்கும் மக்கள் அடிமைகளாகவோ, விவசாயி கள் உள்ளிட்ட சிறு உற்பத்தியாளர்களாகவோ இருந்தமையால் பகிரங்கமாக வேலை தேடித் திரியும் காட்சிகள் இல்லை. வறட்சி உள்ளிட்ட இயற்கை சீற்ற தாக்குதல்கள் அவர்களை புலம் பெயரச் செய்ததுண்டு. ஆனால் வேலையில்லா பட்டாளம் என்ற ஒரு சமூக நிகழ்வு அச்சமூகங் களில் இல்லை. முதலாளித்துவத்தை நோக்கி நிலப்பிரபுத்துவ சமூகம் வேகமாக மாறிய காலத்தில்தான், உற்பத்திக்கருவிகளில் இருந்து அன்னியப்படுத்தப்பட்ட, பலவந்தமாக பிரிக்கப் பட்ட இத்தகைய பட்டாளங்கள் சமூகத்தின் அன்றாட காட்சிகளாக மாறத் துவங்குகின்றன.

### வேலையின்மை

முதலாளித்துவ பொருளாதார வளர்ச்சியில்

பெரும்பகுதி உழைப்பாளிகள் கூலி தொழிலாளி களாக மாறுவதும், முதலாளிகளிடம் வேலைக்கு சேருவதும் இயல்பான நிகழ்வாக தோன்றுகிறது. முதலாளித்துவ அமைப்பில்தான் முதல்முதலாக பெருமளவில் மனிதர்கள் வேலை தேடி அலைவ தும், வேலை கிடைக்காமல் தவிப்பதும் நிகழ் கிறது. இதனை இங்கு ஏன் சொல்கிறோம் என்றால் இந்தியா இன்னமும் முழு முதலாளித் துவத்தை நோக்கி பயணித்துக்கொண்டிருக்கும் சமூகம் என்பதை நினைவுபடுத்தவேண்டியுள்ளது. எனவே, இங்கு பகிரங்கமான வேலையில்லா பட்டாளங்கள் ஒருபக்கம் வேகமாக வளர்ந்து கொண்டிருந்தாலும், மறுபுறம் சுயவேலை செய்வோர் மத்தியில் தங்கள் உழைப்பை முழுமை யாக பயன்படுத்திக்கொள்ளும் வாய்ப்புகளும் குறைந்து வருகின்றன. ஆனால் இவையெல்லாம் வேலையின்மை கணக்கில் வருவதில்லை. அதே சமயம், வேலைவாய்ப்பு

மறுக்கப்பட்டோர்க்கு சமூகப் பாதுகாப்பு அற்ற நமது நாட்டில், ஏழை கள் ஏதாவது வகையில் உழைப்பை செலுத்திக் கொண்டேயிருந்தால்தான் வயிற்றை கழுவிக் கொள்ள முடியும். இதன் பொருள், பலரும் ஏதாவது ஒரு வேலையில் ஈடுபடவேண்டிய கட்டாயத்தில் இருப்பார்கள். இவர்களின் வரு மானம் மிகவும் சொற்பமாக இருந்தாலும் இவர் கள் வேலையில்லாதோர் கணக்கில் வரமாட்டார் கள். இவற்றை எல்லாம் மனதில் நிறுத்திக் கொண்டு இன்று இந்தியா எதிர்கொள்ளும் வேலை யின்மை பிரச்சினையை பரிசீலிப்போம்.

## வேலையின்மை அன்றும் இன்றும்

நாடு விடுதலை பெற்ற காலத்தில் சோவியத் ஒன்றியத்தின் *(1928-1940)* கால மகத்தான வளர்ச்சியும் மேலை நாடுகள் எதிர்கொண்ட *(1929-1939)* கால நீண்ட பொருளாதார பெரும் வீழ்ச்சியும் பொருளாதார

வளர்ச்சியில் அரசாங் கம் மையப்பங்கு ஆற்ற வேண்டும் என்பதையும், மையப்படுத்தப்பட்ட திட்டமிடுதல் அவசியம் என்பதையும், சுதந்திர இந்தியாவின் ஆளும் வர்க்கத்திற்கு உணர்த்தியிருந்தன. 1950 – 1966 காலத்தில் மூன்று ஐந்தாண்டு திட்டங்கள் அமலாக்கப்பட்டன. கணிசமான அளவில் தொழில் துறை, கட்டமைப்பு துறை, நிதித் துறை, கல்வி, ஆரோக்கியம் உள்ளிட்ட மனிதவளத் துறை சார்ந்த முதலீடுகளை பொதுத்துறை மூலம் அரசாங்கம் மேற்கொண்டது. பொதுத் துறை முதலீடுகள், இறக்குமதிக்குப் பதில் உள்நாட்டில் உற்பத்தி, குறுகிய வரம்புகளுக்குட்பட்ட நிலச் சீர்திருத்தம் ஆகிய நடவடிக்கைகள் உள்நாட்டு சந்தையை விரிவடையச்செய்தன.

1900-1950 கால ஐம்பது ஆண்டு தேக்க நிலையில் இருந்து இந்திய பொருளாதாரம் ஆண்டுக்கு 4சூ என்ற வேகத்தில் வளர்ந்தது. நகர்ப்புறங்களில் விவசாயம்

அல்லாத துறைகளில் வேலை வாய்ப்புகள் வேகமாக வளர்ந்தன. மூன்றாம் ஐந்தாண்டு திட்ட காலத்தில் (1961 – 66) ஆலைத்துறை வேலை வாய்ப்பு ஆண்டுக்கு கிட்டத் தட்ட 6ரூ என்ற வேகத்தில் வளர்ந்தது. நிலச்சீர் திருத்தம் கிராமப்புறங்களில் நிலப்பிரபுக்கள் கிடப்பில் போட்டிருந்த நிலங்களை சாகுபடிக்கு கொண்டு வர உதவியது. பொதுத்துறை முதலீடு கள் மூலம் பாசனமும் மின்சார உற்பத்தியும் அதிகரித்ததால் ஒரு பகுதி நிலங்களில் இரண்டு, மூன்று போக சாகுபடி சாத்தியமாயிற்று. 1960 களின் நடுப்பகுதியில் இருந்து திட்டமிடுதல் நெருக்கடிக்கு உள்ளாகிய போதிலும், அரசின் முதலீட்டு முடக்கத்தால் தொழில் வளர்ச்சி பாதிக்கப்பட்ட போதிலும், பசுமை புரட்சி மூலம் 1966 முதல் 1980கள் வரை விவசாயத்தில் வேலை வாய்ப்புகள் அதிகரித்தன. அரசின் ஒருங்கிணைந்த ஊரக வளர்ச்சி திட்டமும் (ஐ ஆர் டி பி – IRDP) வேலை வாய்ப்புகளை கூட்டியது. ஆனால் துல்லியமான ஆய்வுகளின்

அடிப்படையிலான வேலை வாய்ப்பு கள் மற்றும் வேலையின்மை பற்றிய தரவுகள் சேகரிக்கப்படும் முயற்சி 1970களில்தான் துவங்கி யது.

தேசிய மாதிரி ஆய்வு அமைப்பு (NSSO – National Sample Survey Organization) 1972-73 ஆம் ஆண்டில் வேலை வேலை யின்மை பற்றிய நாடு தழுவிய ஆய்வை முதல் முறையாக நடத்தியது. அதன்பின் ஒவ்வொரு ஐந்தாண்டு காலத்திற்குப்பின் இத்தகைய ஆய்வு கள் தொடர்ந்து மேற்கொண்டு வரப்பட்டுள்ளன. இவ்வாறு 1972-73, 1977-78, 1983, 1987-88, 1993-94, 1999-2000, 2004-05, 2009-10 ஆகிய ஆண்டுகளில் ஆய்வுகள் நடத்தப்பட்டன. 2009-10 வறட்சி ஆண்டு என்ற காரணத்தை கூறி அன்றைய திட்டக்குழு 2011-12 ஆண்டில் மீண்டும் ஆய்வு நடத்தியது. இந்த ஆய்வுகள் அனைத்தும் பொதுவாக சிறப்பாக செய்யப்பட்டன. இவற்றில் கிடைத்த புள்ளி விவரங் கள், அவை மீதான கருத்தாழமிக்க ஆய்வுகள்

அடங்கிய அறிக்கைகள் ஒவ்வொரு ஆய்வுக்குப் பின்பும் தயார் செய்யப்பட்டு அச்சடிக்கப்பட்ட வடிவிலும் கூடுதலாக அண்மை ஆண்டுகளில் இணைய தளம் வாயிலாகவும் வெளியிடப் பட்டன. வேலையின்மை பற்றியஇந்த வெளிப் படையான அணுகுமுறையை மோடி தலைமை யிலான பாஜக அரசு பின்பற்ற வில்லை என்பது குறிப்பிடத்தக்கது. தொடர்ந்து வெளிவந்துள்ள இவ்வறிக்கைகள் தாராளமய காலத்தில் வேலை வாய்ப்ப்புகள் முன்பைவிட குறைவான வேகத்தில் தான் அதிகரித்துள்ளன என்பதையும் வேலை யின்மை பிரச்சினை இக்கால கட்டத்தில் அதிகரித் துள்ளது என்பதையும் காட்டு கின்றன.

2011-12க்குப்பின் 2016-17இல் அடுத்த ஆய்வு நடந்திருக்க வேண்டும். ஆனால் பாஜக அரசு ஆய்வை நடத்தவில்லை. அந்த ஆண்டில் நவம்பர் மாதம் எட்டாம் நாள் பணமதிப்பிழப்பு நடவடிக்கையை

மோடி பிரகடனம் செய்தார். அதற்குப் பிறகு பணமதிப்பிழப்பு சூறாவளி ஒருபுறமும், அதன் மோசமான விளைவுகளை மறைக்க முயலும் மோடி அரசின் பிரச்சார சூறாவளி மறுபக்கமும் மக்களை தாக்கின. பல கேள்விகள் எழுப்பப்பட்டபின் 2017-18 ஆண்டில் ஆய்வு மேற்கொள்ளப்பட்டது. களஆய்வு முடிந்து அறிக்கையும் தயாராகி விட்டது. டிசம்பர் 2018 இல் தேசிய புள்ளியியல் ஆணையம் அறிக்கையை ஏற்று ஒப்புதலும் அளித்துவிட்டது. ஆனால் மோடி அரசு அறிக்கையை வெளியிடா மல் இன்றுவரை இழுத்தடித்துவருகிறது. இதற்கு ஒரு முக்கிய காரணம் 2017-18க்கான ஆய்வு அறிக்கை வேலையின்மை விகிதம் கணிசமாக உயர்ந்துள்ளதை படம் பிடித்துக்காட்டுகிறது என்பதாகும். தாராளமய கொள்கைகள் மட்டு மின்றி, மத்திய அரசின் பணமதிப்பிழப்பு நடவடிக் கையும், குழப்பம் நிறைந்த ஜி எஸ் டி அமலாக்க மும் வேலையின்மை பிரச்சினையை தீவிரப்படுத்தி யுள்ளன

என்பதை ஆய்வின் தரவுகள் உறுதி செய்கின்றன.

### வேலையின்மை புள்ளிவிவரங்கள்: சிறு விளக்கம்

வேலையின்மை பிரச்சினையின் இன்றைய அளவு மற்றும் தன்மை ஆகியவற்றுக்குள் செல்வதற்கு முன், வேலையின்மையை கணக்கிடுவதில் உள்ள சில நுட்பமான அம்சங்கள் பற்றி பார்ப் போம். முதலில், உழைப்பு படை என்பதன் இலக்கணத்தை நாம் புரிந்துகொள்ள வேண்டும். நாட்டில் உள்ள அனைவரும் உழைப்புப் படை யில் இல்லை. குழந்தைகள், மிக அதிக வயதில் உள்ளவர்கள், பல காரணங்களால் வேலை செய்ய இயலாத நிலையில் உள்ளோர், படித்துக் கொண்டிருப் பவர்கள் என்று மொத்த மக்கள் தொகையில் ஒரு குறிப்பிடத்தக்க விகிதத்தினர் பொருளாதார உற்பத்தி சார்ந்த வேலை செய்வதும் இல்லை; அத்தகைய வேலை தேடுவதும் இல்லை. இவர் களை உழைப்பு படைக்கு அப்பால்

உள்ளவர்கள் என்று அழைக்கிறோம். இவர்களில் ஒரு கணி சமான பகுதியினர் வீட்டு வேலைகளில், குடும்ப உறுப்பினர்களின் தேவைகளை நிறைவு செய்வ தில் கடுமையாக உழைக்கும் பெண்கள் ஆவர். இவர்களின் உழைப்பு இன்றியமையாதது என்றா லும், இவ்வித உழைப்பு அதிகாரபூர்வ புள்ளிவி வரக் கணக்குகளில் தேச உற்பத்திசார் உழைப் பாக கருதப்படுவதில்லை. இந்த உழைப்பை மட்டுமே செலுத்துவோர் உழைப்பு படை என்ற கணக்கில் வருவதில்லை. மற்றொரு முக்கிய பகுதி பல்வேறு நிலை படிப்புகளில் உள்ள மாணவ மாணவியர் ஆவர்.

வேலையில் இருப்போர், வேலை தேடிக் கொண்டிருப்பவர்கள் என்ற இரண்டு வகையினர் சேர்ந்ததுதான் உழைப்பு படை. இதில் வேலையில் உள்ளவர்கள் வேலைப்படை யில் உள்ளனர். உதாரணமாக, கடந்த ஒரு ஆண்டை கால வரம்பாக

வைத்து 1,000 பேரிடம் கணக்கு எடுக்கிறோம் என்று வைத்துக்கொள்வோம். அவ்வாறு கணக்கெடுக் கப்படும்பொழுது 600 பேர் கடந்த ஒரு ஆண்டில் சில நாட்களாவது ஏதோ ஒரு பணியில் – சுய தொழில் அல்லது கூலி/சம்பள உழைப்பு – ஈடுபட்டிருக்கலாம். மேலும் ஒரு சிலர் – 25 பேர் என்று எடுத்துக்காட்டுக்காக கொள்வோம் – கடந்த ஒரு ஆண்டில் வேலை தேடியும் வேலை கிடைக்காதவர்களாக இருக்கலாம். ஆக உழைப்பு படையின் எண்ணிக்கை 625. மீதி 375 (1000 – 625 = 375) பேர் குழந்தைகளாகவோ படித்துக் கொண்டிருப் பவர்களாகவோ மிகவும் முதியோர் அல்லது வேறு காரணங்களுக்காக உழைக்கும் நிலையில் இல்லாதவர்களாகவோ இருக்கலாம். இவர்கள் உழைப்பு படையில் இல்லாதவர்கள். இந்த உதாரணத்தில் வேலையின்மை விகிதம் = வேலை கிடைக்காதவர்கள் / மொத்த வேலைப் படை = 25 / 625 அல்லது 1/25, அதாவது 4%.

வேலையின்மை விகிதத்தை கணக்கிடும் பொழுது என்ன கால வரம்பை வைத்து ஒருவர் வேலை யில்லாதோர் பட்டியலில் இடம் பெறுகிறார் என்பது ஒரு முக்கிய கேள்வி. ஒருவர் மூன்று மாதங்களுக்கு முன்பு ஏதோ ஒரு வேலையில் (சுய வேலை, கூலி/சம்பள வேலை) இருந்திருக்கலாம். ஆனால் கடந்த ஒருவாரம் அவருக்கு எங்கும் வேலை கிடைக்காமல் இருந்திருக்கலாம். கடந்த ஒரு ஆண்டை வரம்பாக வைத்துக்கொண்டால், இந்த நபர் வேலையில்லாதோர் பட்டியலில் இடம் பெற மாட்டார். கடந்த ஒருவாரம்தான் காலவரம்பு என்றால், இந்த நபர் வேலையில்லாதோர் பட்டியலில் இடம் பெறுவார்.

நமது நாட்டில் வேலையில் இல்லை; எனவே வருமானம் இல்லை என்றால் சாப்பாட்டுக்கு வழியில்லை என்பதுதான் பெரும்பகுதி மக்களின்

நிலைமை. இதற்கு விதிவிலக்கு செல்வந்தர்கள் மட்டுமே. தமது செல்வம் மூலம் கிடைக்கும் வருமானத்தில் வேலை செய்யாமலே அவர்கள் வசதியாக வாழ முடியும். ஒரு ஆண்டு என்பதை கால வரம்பு என்று கொண்டால் உழைப்பு படையில் மிகச்சிலரே வேலைஇல்லாதோர் பட்டியலில் இடம் பெறுவர். மற்றவர்கள் ஏதோ ஒரு கூலி / சம்பள வேலையில் அல்லது சொந்த விவசாயம், வர்த்தகம், தொழில் வேலைகளில் இருப்பார்கள். இவை எதுவும் கிடைக்காத நிலை யில், ஏதோ ஒரு சுய வேலையை உருவாக்கிக் கொண்டு வாழ்வாதாரத்தை தேடிக் கொண்டிருப் பார்கள். மிகச் சிலர்தான் வருடம் முழுவதும் வேலை தேடியும் கிடைக்காமல் இருப்பவர்களாக கணக்கில் வருவர்.

கடந்த ஒரு ஆண்டை கால வரம்பாக வைத்து ஒருவர் வேலையில் இருந்தார்; அல்லது இல்லை

என்று முடிவுசெய்வதை மாமூல் வேலை நிலை *(usual status – US)* என்று அழைப்பது வழக்கம். இதன்படி மேலே கொடுக்கப்பட்ட உதாரணத் தில் மாமூல் நிலை அடிப்படையில் வேலையின்மை விகிதம் *4*ரு. இதற்குப்பதில், *"*கடந்த ஒருவாரத்தில் நீங்கள் ஏதேனும் வேலை செய்தீர்களா?*"* என்று கேட்டு விவரம் சேகரிக்கலாம். கடந்த ஒருவார மாக வேலையில் இருந்ததாக நிர்ணயிக்கப்படும் நபர்களின் எண்ணிக்கையையும், *"*கடந்த ஒருவார மாக வேலை தேடிக்கொண்டிருந்தேன், ஆனால் எந்த வேலையும் கிடைக்கவில்லை*"* என்று சொல்லுகின்ற நபர்களின் எண்ணிக்கையையும் கூட்டினால் கிடைக்கும் எண்ணிக்கை நடப்பு வாராந்தர நிலை அடிப்படை யில் மொத்த வேலைப் படையாகும். கடந்த வாரத்தில் வேலைகிடைக்காதோரின் எண்ணிக் கையை வாராந்தர நிலை அடிப்படையிலான மொத்த வேலைப்படையின் எண்ணிக்கையால் வகுத்தால்

கிடைப்பது ஊறுளு வேலையின்மை விகிதம் பொதுவாக, ஊறுளு வேலையின்மை விகிதம் மாமூல் நிலை வேலையின்மை விகிதத்தை விட அதிகமாகவே இருக்கும். எடுத்துக்காட்டாக, 1,000 நபர்களிடம் கடந்த ஏழு நாட்களில் ஏதேனும் வேலையில் இருந்தீர்களா என்று கேட்டால் 550 நபர்கள் வேலையிலும் 50 நபர்கள் வேலை இல்லாமலும் மீதம் 400 பேர் உழைப்பு படைக்கு வெளியேயும் இருக்க வாய்ப்பு உண்டு. இந்த நிலையில், ஊறுளு வேலை விகிதம் 50/ (550 + 50) = 50/600 = 1/12 அல்லது 8.33%

வேலையின்மை விகிதம் நகரம்/கிராமம், பாலினம், வயது, கல்வித்தகுதி ஆகியவற்றின் அடிப்படை யில் வேறுபடும். பொதுவாக இளைஞர்கள் மத்தி யிலும் கல்வி பெற்றவர் மத்தியிலும் வேலையின்மை விகிதம் சராசரியை விட அதிகமாக இருக்கும். இப்பொதுவான அறிமுகத்துடன் தற்சமயம் நிலவுகின்ற வேலையின்மை

விவரங்களை பரிசீலிப் போம்.

## முழுப் பூசணிக்காயை சோற்றில் மறைக்கும் முயற்சி

2017-18க்கான உழைப்பு படை பற்றிய அறிக்கையை வெளியிடாமல் மத்திய அரசு காலம் தாழ்த்து கிறது என்பதை ஏற்கெனவே நாம் குறிப்பிட் டோம். இந்த தாமதமும் தேசிய புள்ளியியல் ஆணையத்தின் பொறுப்பு தலைவர் திரு பி.சி. மோகனன் அவர்களும் அதன் உறுப்பினர் தில்லி பல்கலைக்கழக பேராசிரியர் ஜே. வி. மீனாட்சி அவர்களும் அந்த ஆணையத்தில் இருந்து தமது பதவிகளை ராஜினாமா செய்து வெளியே வந்த தற்கு ஒரு முக்கிய காரணம். இதுபற்றி திரு மோகனன் அவர்கள் அண்மையில் விளக்கி யுள்ளார். இந்த ஆய்வு அறிக்கையை அரசு வெளியிட மறுத்தாலும் பிசினஸ் ஸ்டான்டார்ட் என்ற ஆங்கில நாளிதழ் ஜனவரி

மாத இறுதியில் அறிக்கையின் முக்கிய விவரங்கள் சிலவற்றை வெளியிட்டது.

இதன்படி, 1977-78 இல் இருந்து 2011-12 வரை 2% இல் இருந்து 2.5ரூ க்குள்ளேயே இருந்த மாமூல் வேலையின்மை விகிதம் 2017-18 இல் ஏறத்தாழ மூன்று மடங்கு அதிகரித்து 6.1 % ஆக இருந்தது. நாற்பத்தி ஐந்து ஆண்டுகளில் மிகவும் அதிகமான அளவிற்கு, பல மடங்கு வேலையின்மை விகிததம் உயர்ந்துள்ளது. பாஜக அரசிற்கே என்ற விவரத்தை மறைக்கவே எனவே தான்அரசு இதுவரை அறிக்கை வெளிவராமல் பார்த்துக்கொண்டிருக்கிறது. ஆனால் விவரங் கள் எப்படியும் வெளியே வந்துவிட்டன. இப்பொழுது தனது தேர்தல் பிரச்சாரத்தில் வேலை வாய்ப்பு பற்றி தப்பி தவறிக்கூட பாஜக பேசுவதில்லை. இந்த அறிக்கை மட்டுமல்ல. இதே காலத்தில் வெளிவந்துள்ள இரு தனியார் துறை ஆய்வுகளும் கிட்டத்தட்ட இதே

மாதிரியான தகவல்களை கூறுகின்றன. ஊஆஐநு என்ற தனியார் நிறுவனம் – 'Centre for Monitoring the Indian Economy', அதாவது, "இந்திய பொருளாதாரத்தை கண் காணிக்கும் மையம்", 2017 ஜனவரி முதல் ஏப்ரல் வரையிலான காலத்தில் பணமதிப்பிழப்பு பிரச் சினையின் கடும் தாக்குதலால் 15 லட்சம் வேலை கள் இழக்கப்பட்டன என்று தெரிவித்தது. பின்னர், 2017 டிசம்பர் முதல் 2018 நவம்பர் வரையிலான காலத்தில் ஒரு கோடியே பத்து லட்சம் வேலைகள் காணாமல் போய்விட்டன என்று தெரிவித்துள்ளது.

இந்த அமைப்பின் ஆய்வுகள் 2018 மே மாதம் வேலையின்மை விகிதம் 5.14ர% ஆக இருந்தது என்றும் ஏப்ரல் 2019இல் 7.60% ஆக அதிகரித்துள்ளது என்றும் கூறு கின்றன. இதேபோல் பெங்களூரில் உள்ள அஜிம் ப்ரேம்ஜி பல்கலைக்கழகம் தனது ஆய்வு ஒன்றில் நவம்பர் 2016 முதல் 2018 முடிய 50 லட்சம்

வேலை கள் இழக்கப்பட்டுள்ளன என்றும் இதற்கு ஒரு முக்கிய காரணம் பணமதிப்பிழப்பு நடவடிக்கை என்றும் குறிப்பிடுகிறது. ஏற்கெனவே, மத்திய அரசின் உழைப்பு வாரியம் – லேபர் ப்யூரோ – தனது செப்டம்பர் 2016 அறிக்கை யில் மாமூல் வேலையின்மை விகிதம் 5% ஐ எட்டி விட்டது என்று பதிவிட்டது. அதன்பின் லேபர் ப்யூரோ அறிக்கைகளும் வெளிவரவில்லை. இது தற்செயலான நிகழ்வு அல்ல என்றே கருதவேண்டி யுள்ளது. பணமதிப்பிழப்பு, அதன்பின் வந்த ஜிஎஸ்டி குளறுபடி இவற்றால் பொருளாதாரம் சிதைவுற்றுள்ள நிலையில் புள்ளிவிவரங்களை வெளியிடுவதே ஆபத்து என்று மோடி அரசு கருதுகிறது. தேசிய குற்றப்பதிவேட்டு வாரியமும் மூன்று ஆண்டுகளாக அறிக்கை களை வெளியிடவில்லை.

மோடி அரசின் கீழ் ரிசர்வ் வங்கி, மத்திய புலனாய்வு நிறுவனம், வருமான வரித்துறை,

அமலாக்கத்துறை போன்ற பல நிறுவனங்கள் சிதைக்கப்பட்டு வருவதைப் போல், மத்திய புள்ளியியல் அமைப்புகளும் பாதிக்கப்பட்டுள்ளன. பொருளாதார வளர்ச்சி தொடர்பாக அரசு தரும் விவரங்கள் நமபகத்தன் மையை இழந்துள்ளன. வேலையின்மை பிரச் சினையில் அரசுக்கு ஆதரவான விவரங்களை வெளியிடுவதற்கு அரசால் முடியவில்லை. முத்ரா திட்டம் பற்றிய உண்மை விவரங்கள் வெளிவந்த பிறகு பெருமளவில் வேலை உருவாக்கம் நிகழ்ந் துள்ளதான கதையாடலுக்கு அதுவும் கைகொடுக்க வில்லை.

## அரசு மறைத்த அறிக்கை தரும் செய்திகள்

மோடி அரசால் இன்றுவரை மறைக்கப்பட் டுள்ள 2017-18க்கான உழைப்பு படை பற்றிய அறிக்கை பல முக்கிய விவரங்களை நமக்கு தருகிறது. இதன் ஒரு முக்கிய அம்சத்துடன் தொடங்கலாம். 2011-12 முதல் 2017-18 வரையிலான ஆறு ஆண்டுகளில்

வேலைப்படையில் உள்ளவர் களின் எண்ணிக்கையே குறைந்துள்ளது. 2011-12 இல் நகரப்பகுதியில் 8.915 கோடி நபர்களும் கிராமங்களில்21.488 கோடி நபர்களும் ஆக மொத்தம் 30.4 கோடி மக்கள் வேலைப்படையில் இருந்தனர். 2017-18 இல் நகரப்புறங்களில் 8.492 கோடி நபர்களும் கிராமங்களில் 20.10 கோடி நபர்களும் என மொத்தமாக 28.6 கோடி நபர்கள் தான் வேலைப்படையில் இருந்தனர். அதாவது, மக்கள் தொகை இக்காலத்தில் பெருகியிருந்தா லும் வேலையில் இருப்போர் எண்ணிக்கை சுருங்கி விட்டது. கடும் வேலைப்பஞ்சம் நாட்டில் உருவாகியுள்ளது. ஏற்கெனவே 1983, 1993-94, 2011-12 ஆகிய ஆண்டுகளில் நடத்தப்பட்ட என் எஸ் எஸ் ஆய்வுகளில் இருந்து தாராளமய கால கட்டத்தில் வேலை வாய்ப்புகள் அதிகரிக்கவில்லை என்ற செய்தி நமக்கு கிடைக்கிறது. ஆனால், மோடி அரசின் பணமதிப்பிழப்பு மற்றும் ஜிஎஸ்டி நடவடிக்கைகள் தாராளமய கொள்கைகளோடு

கூடுதல் தாக்குதல்களாக – பெரும் தாக்குதல்களாக வேலை வாய்ப்பை அழித்தொழிப்பதில் பங்களித் துள்ளன. நாடு பாய்ச்சல் வேகத்தில் பொருளா தார வளர்ச்சியை தனது ஆட்சியில் சாதித்து வருவதாக தம்பட்டம் அடித்துவந்த பிரதமரும் ஆளும் கட்சியினரும், இதேகாலத்தில் வேலை யில் உள்ளோர் எண்ணிக்கையே குறைந்துள்ளது என்ற செய்தியை மூடிமறைக்க கடும் முயற்சி செய்தனர். அதையெல்லாம் தகர்த்து இப்பொழுது இந்த அறிக்கை உண்மையை வெளிச்சத்திற்கு கொண்டு வந்துள்ளது.

அடுத்து, வேலைவீழ்ச்சி பெரும் அளவிற்கு வேளாண் துறையை பாதித்துள்ளது. கிராமங் களில் கடந்த ஆறு ஆண்டுகளில் விவசாயத்தில் வேலை செய்யும் (உழைக்கும் வயதில் உள்ள) ஆண்களின் சதவிகிதம் 48 இல் இருந்து 40 ஆக குறைந்துள்ளது. ஆனால் பிற துறைகளில் வேலை

கள் அதிகம் உருவாகவில்லை. இதன் விளைவாக வேலையில் இல்லாத ஆண்களின் சதவிகிதம் 20 இல் இருந்து 28 ஆக அதிகரித்துள்ளது. வேலை யில் இல்லாதவர்கள் சதவிகிதம் கிராமப்புற பெண்கள் மத்தியில் 50 இல் இருந்து 76 ஆக உயர்ந்துள்ளது. வேலையின்மை பிரச்சினை கிராமப்புற பெண்களை மிகவும் கடுமையாக பாதித்துள்ளது. கிராமப்புறங்களில் வேலைப் படையில் உள்ள பெண்களின் எண்ணிக்கை 2011-12 இல் 9.39 கோடியாக இருந்தது. 2017-18 இல் இது 6.48 கோடியாக, ஏறத்தாழ 3 கோடி குறைந் துள்ளது. கிராமப்புறங்களில் வேலைப்படையில் உள்ள ஆண்களின் எண்ணிக்கையும் 21.5 கோடியி லிருந்து 20.1 கோடியாக, 1.4 கோடி குறைந்துள்ளது.

வேளாண் நெருக்கடியின் இன்னொரு பரி மாணம் இது. வேலையின்மை பிரச்சினையும் வேளாண் நெருக்கடியும் ஒன்றோடு ஒன்று தொடர்புடையவை

என்பதையும் நாம் காணமுடி கிறது. குறிப்பாக, கிராமங்களில் கூலி வேலை செய்யும் ஆண்களின் எண்ணிக்கை 2011-12 இல் 7 கோடியே 63 லட்சமாக இருந்தது. இது 2017-18 இல் 5 கோடியே 67 லட்சமாக சரிந்துவிட்டது. கிராமப்புற பெண்களில் கூலி வேலை செய்தவர் கள் 2011-12 இல் 3 கோடியே 30 லட்சம். 2017-18 இல் இது 2 கோடியே 6 லட்சமாக, 1 கோடியே 24 லட்சம் சரிந்து விட்டது. மொத்தத்தில், ஊரகப் பகுதிகளில் மோடி அரசின் ஆட்சிக் காலத்தில் வேலையின்மை பிரச்சினை மிகவும் கடுமையாக ஆக்கப்பட்டு இருக்கிறது.

## அதிகரித்துவரும் வேலை இன்மை விகிதம்

அடுத்தடுத்து 1970களின் பிற்பகுதியில் இருந்து ஐந்தாண்டுக்கு ஒருமுறை வெளிவந்துள்ள என் எஸ் எஸ்ஒ- வின் அனைத்து அறிக்கைகளிலும் 2011-12 அறிக்கை வரை மாமூல் வேலையின்மை விகிதம்

*2% லிருந்து 2.5% ஐ தாண்டவில்லை. ஆனால் முதன்முறையாக, 2017-18 ஆய்வறிக்கை மாமூல் வேலையின்மை விகிதம் 6.1% என்று ஆகியுள்ளது என சுட்டிக்காட்டுகிறது. இதுவே வேலையின்மை யின் கடுமையை குறைத்துக் காட்டுவதாகும். ஏனெனில், உழைப்புப் படையில் சரிபாதி பேர் சுய வேலையில் உள்ளவர்கள் என்பதால் அவர்கள் மத்தியில் பகுதி நேரம் வேலையில்லா நேரமாக இருக்கும் வாய்ப்பு கணிசமானது. பகிரங்க வேலை யின்மையைத்தான் நமது புள்ளிவிவரங்கள் வெளிக் கொணர்கின்றன. எனினும், கடந்த காலத்துடன் ஒப்பிடும் பொழுது இந்த கணக்கின்படியான வேலையின்மை விகிதம் மூன்று மடங்கு ஆகி யுள்ளது என்பது முக்கியமான செய்தி. மாமூல் நிலை வேலையின்மை விகிதத்திற்கு கடந்த ஒரு ஆண்டை கணக்கில் கொள்கிறோம். கடந்த ஏழு நாட்களை வைத்தும் வேலையின்மை கணக்கிடப் படுகிறது என்பதை நாம் ஏற்கெனவே குறிப்பிட்*

டோம். இதில் கிடைப்பது நடப்பு வாராந்தர அடிப்படையிலான வேலையின்மை விகிதம் – *CWS (Current Weekly Status)* வேலையின்மை விகிதம் என்று இது அழைக்கப்படுகிறது. இது மாமூல் வேலையின்மை விகிதத்தை விட பொருத்தமான அலகு. இதன்படி *2011-12* மற்றும் *2017-18* விவரங் கள் கீழ்க்காணும் அட்டவணையில் தரப்பட் டுள்ளன:

## வாராந்தர நிலை வேலையின்மை விகிதங்கள்

*2011-12 (ஆண்கள்) 3.5 (பெண்கள்) 4.2 (நகரம்) 4.4 (கிராமம்) 3.4 (மொத்தம்) 3.7 2017-18 (ஆண்கள்) 8.8 (பெண்கள்) 9.1 (நகரம்) 9.6 (கிராமம்) 8.5 (மொத்தம்) 8.9* கடந்த ஆறு ஆண்டுகளில் வேலையின்மை நிலைமை பெரிதும் மோசமடைந்துள்ளதை பார்க்கலாம். இதில் ஒருபகுதி தாராளமய கொள் கைகளின் தாக்கம். ஆனால் ஒரு கணிசமான பகுதி பணமதிப்பிழப்பு மற்றும் குளறுபடி நிறைந்ததும், அடிப்படையில்

மோசமானதுமான ஜிஎஸ்டி அமலாக்கத்தின் விளைவு. இளைஞர்கள் மத்தியில் வேலையின்மை மேலும் தீவிரமாக உள்ளது. 15 வயது முதல் 29 வயது வரையிலானவர்கள் மத்தியில் வேலை யின்மை விகிதம் 13.6ரூ இல் இருந்து 27.2% வரை உள்ளது. அடுத்து, பத்தாம் வகுப்பு மற்றும் அதற்கு மேல் படித்தவர்களின் நிலமை கீழே தரப்பட்டுள்ளது:

### படித்தவர் வேலையின்மை விகிதம்

| | 2011-12 | 2017-18 |
|---|---|---|
| கிராமப்புற ஆண்கள் | 3.6 | 10.5 |
| கிராமப்புற பெண்கள் | 9.7 | 17.3 |
| நகர்ப்புற ஆண்கள் | 4.0 | 9.2 |
| நகர்ப்புற பெண்கள் | 10.3 | 19.8 |

பணிசார்பயிற்சி மற்றும் தொழில்நுட்ப பயிற்சி பெற்றோர் நிலைமையும் மோசமாகவே உள்ளது. அவர்கள் மத்தியில் வேலையின்மை விகிதம் 2011-12

இல் 5.9% (ஆண் 5.7%, பெண் 6.4%) ஆக இருந்தது. 2017-18 இல் 12.4% (ஆண் 13.8%, பெண் 10.4%) ஆக உயர்ந்துள்ளது. பாஜக அரசு இந்த அறிக்கையை வெளியிட ஏன் மறுக்கிறது என்பது இதிலிருந்தே தெளிவாகிறது!

## இறுதியாக

இக்கட்டுரையில் நாம் பெரும்பாலும் வேலையின்மையின் அளவு பற்றிய விவரங்களையும் கருத்துக்களையும் விவாதித்துள்ளோம். அவை நமக்கு சொல்லும் செய்தி தாராளமய கொள்கைகளால் ஏற்கெனவே அதிகரித்துவந்த வேலையின்மை மோடி அரசின் மிகத் தவறான இரு நடவடிக்கைகளால் – பணமதிப்பிழப்பு நடவடிக்கை, ஜிஎஸ்டி அமலாக்கம் – மிக அதிகமான அளவிற்கு சென்றுள்ளது என்பதாகும். முறைசாராத் துறை பெரும் சேதத்திற்கு உள்ளாக்கப்பட்டுள்ளது. இந்த துறைதான்

அதிக வேலை வாய்ப்புகளை கொண்ட துறை. கார்ப்பரேட் முதலீடுகள் மிகக் குறைந்த அளவில்தான் வேலைகளை உருவாக்கு கின்றன. பொதுத்துறை முதலீடுகள் மோடி ஆட்சியிலும் அதற்கு முன்பே அமலாக்கப்பட்டு வந்த தாராளமய கொள்கைகளாலும் சரிந்து வந்துள்ளன. இந்நிலையில் சிறு குறு விவசாயம், சிறு தொழில், சிறு வணிகம், வேளாண்மை, கைவினை தொழில்கள் போன்றவைதான் ஓரள விற்காவது வேலை வாய்ப்புகளை உருவாக்கி வந்தன. மோடி அரசு இத்துறைகள் அனைத்தை யும் அழித்துவிடுவதில் பெரும் முனைப்பு காட்டு கிறது.

கள நிலைமை உழைப்பாளி மக்களுக்கு பெரும் சவாலாக உள்ளது. கிராமப்புற கூலி தொழிலாளி களின் வருமானம் கடந்த சில ஆண்டுகளில் பெரிதும் சரிந்துள்ளது. விவசாயிகளின் விளை பொருள் விலைகள் மேலும் சரிந்து வேளாண் நெருக்கடி

தீவிரமடைந்துள்ளது. அரசு மறைக்க முயலும் ஆய்வறிக்கை பல செய்திகளை சொல்லு கிறது. கூலி தேக்கமாக இருப்பது, சுய வேலையில் சராசரி வருமானம் மிகக் குறைவாக இருப்பது, இந்திய உழைக்கும் மக்கள் வாரம் ஒன்றிற்கு சராசரியாக 50 மணி நேரத்திற்கும் அதிகமாக பாடுபடுவது, அத்தகைய கடும் உழைப்புக்குப் பின்பும் சொற்ப வருமானத்தையே பெறுவது உள்ளிட்ட பல விஷயங்களும் பொதுவெளியில் விவாதிக்கப்பட்டு நிலைமைகளை மாற்ற போராட்டங் களை திட்டமிட்டு நடத்த வேண்டிய சவால் ஜனநாயக இயக்கத்தின் முன்பு உள்ளது. இக்கட்டுரை யின் அளவு வரம்பு, வாசிப்பவர்களின் பொறுமை ஆகியவற்றை கணக்கில் கொண்டு வேலை யின்மை பிரச்சினையின் பல அம்சங்களுக்குள் நாம் செல்ல இயலவில்லை. பெண்கள், தலித்து கள், பழங்குடி மக்கள், பிற்படுத்தப்பட்டோர், கிராமப்புற உழைப்பாளிகள்

ஆகியோர் கூடுத லாக பாதிப்புகளை சந்தித்துள்ளனர். இவை பற்றியெல்லாம் கள அளவில் திட்டவட்டமாக பரிசீலித்து கோரிக்கைகளை உருவாக்கி இயக்கத்தை முன்னெடுத்துச் செல்வது அவசர அவசியம்.

# 5. இயக்கவியல் விதி: எதிர்மறைகளின் ஒற்றுமை இருப்பை சாத்தியமாக்கும்

வெங்கடேஷ் ஆத்ரேயா

எதிர்மறைகளின் ஒற்றுமை இருப்பை சாத்தியமாக்கும்; ஆனால் அவற்றின் தவிர்க்க முடியாத முரண்பாடு / மோதல் வளர்ச்சிக்கு இட்டுச் செல்லும் இயக்கம் என்பதுதான் பொருளின் இருப்பு வடிவம் என்ற கருத்தை இயக்கவியல் பொருள் முதல்வாதம் முன்வைக்கிறது மாற்றம் என்பதே பொருளின் இயல்பு நிலை. விதிவிலக்கின்றி ஒவ்வொரு பொருளுக்கும் இவ்விரு தன்மைகள் – இயக்கம், மாற்றம் பொருந்தும் என்பது– மார்க்சீய தத்துவத்தின் புரிதல்.

மார்க்சீய தத்துவம் ஒவ்வொரு பொருளிலும் எதிர்மறை அம்சங்கள் இணைந்துள்ளன என்று கூறுகிறது. இந்த எதிர்மறை அம்சங்களின் பரஸ்பர உறவில் ஒற்றுமை, முரண்பாடு ஆகிய இரண்டு அம்சங்களும் உண்டு ஒற்றுமை என்ற அம்சம்தான் பொருளின் இருப்பை உறுதிசெய் கிறது. பொருள் தனது இருப்பை இழக்காமல் இருக்க எதிர்மறை அம்சங்களின் ஒற்றுமை அவசியமாகிறது. இருப்பை காக்கும் பங்கை அது ஆற்றுகிறது. எனினும், பொருளின் இருப்பு வடிவமே இயக்கம், மாற்றம் என்பதால், அந்த மாற்றத்திற்கான உந்துசக்தியாக இருப்பது பொருளில் புதைந்திருக்கும் எதிர்மறை அம்சங் களுக்கு இடையேயான முரண்பாடுதான். பொருளில் உள்ள எதிர்மறை அம்சங்களின் உறவிலுள்ள ஒற்றுமை என்ற தன்மை பொருளின் இருப்பை சாத்தியமாக்குகிறது. எதிர்மறை அம் சங்களின் உறவில் உள்ள முரண்பாடு என்ற அம்சம்தான் மாற்றத்தை

சாத்தியமாக்குகிறது. ஒற்றுமை என்ற அம்சம் தற்காலிகத் தன்மை கொண்டது. ஏனெனில் பொருள் மாறாமல், வளராமல் இருக்க இயலாது. பொருளின் தன்மை மாறும்வரை உள்ள இருப்பு என்பதை ஒற்றுமை என்ற அம்சம் சாத்தியமாக்கினாலும், இறுதியில் தவிர்க்க முடியாதது மாற்றமே. ஒற்றுமை அம்சம் ஒரு கட்டத்தில் – பொருளின் தன்மை மாற்ற கட்டத்தில் – காலாவதி ஆகிவிடும். ஆனால், முரண்பாடு என்ற அம்சம் நிரந்தரமானது; அடிப் படையானது. அதுவே அடுத்த கட்ட வளர்ச்சிக்கு தன்மை மாற்றத்தை உருவாக்கி, இட்டுச் செல்கிறது.

இயற்கையில் பல உயிரினங்கள் முட்டை போட்டு குஞ்சு பொறித்து இனப்பெருக்கம் செய்கின்றன. முட்டையின் ஓடுதான் குஞ்சுகள் உயிருடன் வெளிவருவதற்கான கட்டம் வரும் வரை குஞ்சுகள் வளர்வதற்கான பாதுகாப்பை

அளிக்கின்றது. ஆகவே, முட்டையின் ஓட்டுக்கும் குஞ்சுகளுக்கும் உள்ள உறவில் ஒற்றுமை என்ற அம்சம் உள்ளது. ஆனால், முட்டையின் ஓடு உடைவதன் மூலம் தான் குஞ்சுகளின் உயிரும் அடுத்தகட்ட வளர்ச்சி யும் சாத்தியமாகும். எனவே பொறிக்கப்படும் குஞ்சுகளுக்கும் முட்டையின் ஓடுக்கும் உள்ள உறவில் முரண்பாடு என்ற அம்ச மும் உள்ளது. அதுவே, அடுத்தகட்ட வளர்ச்சிக்கு அவசியம் ஆகிறது. இயற்கையில் இத்தகைய நிலைமைதான் பொதுவானது.

சமூகத்தில் முதலாளித்துவ அமைப்பில் தொழிலாளி களும் முதலாளிகளும் இரு பெரும் வர்க்கங்களாக மோதுகின்றனர். நமது அனுபவம் கூறுவது என்ன? முதலாளித்துவ அமைப்பு நடப்பில் இருக்கும்பொழுது, தனது வாழ்வாதாரத் திற்கே தொழிலாளி வர்க்கம் முதலாளி வர்க்கத்தை சார்ந்து இருக்கிறது. தனது இருப்பு என்பதே வேலையும்

சம்பளமும் கிடைத்தால்தான் என்ற நிலையை தொழிலாளி வர்க்கம் சந்திக்கிறது. அதேபோல், தொழிலாளிகளை வர்க்க எதிரியாக முதலாளி வர்க்கம் உணர்ந்தாலும், லாபம் ஈட்ட தொழிலாளிகளின் உழைப்பு இன்றியமையாதது என்பதை முதலாளி வர்க்கம் சந்திக்கிறது. *("செயற்கை நுண்ணறிவு" என்று தற்காலத்தில் பரவலாக பேசப்படும் AI – Artificial Intelligence இந்த நிலைமையை மாற்றாது).*

எனவே முதலாளித்துவம் என்ற அமைப்பின் இருப்பிற்கு எதிர்மறையான தொழிலாளி-முதலாளி வர்க்க உறவில் உள்ள ஒற்றுமை என்ற அம்சம் அவசியமாகிறது. ஆனால், முதலாளித்துவம் வளர்வதே தொழிலாளி வர்க்கம், முதலாளி வர்க்கம் ஆகிய இரு வர்க்கங் களின் மோதலால் தான். இதுதான் இயந்திர மாக்கலுக்கும் பெரும் வேலையின்மைக்கும், உற்பத்தி சக்திகளின் அதிவேக வளர்ச்சிக்கும், போட்டி

முதலாளித்துவம் ஏகபோக முதலாளித் துவமாக மாறவும் இட்டுச்செல்கிறது. இதுவே இறுதியில் வர்க்க முரண்பாடு முற்றி, தொழிலாளி வர்க்கம் முதலாளி வர்க்கத்தை வீழ்த்தி, சோசலிச அமைப்பை உருவாக்கவும் இட்டுச் செல்கிறது. இங்கும் எதிர்மறை அம்சங்களின் ஒற்றுமை அம்சம் இருப்பையும் அவற்றின் முரண்பாடு மாற்றத்தையும் சாத்தியப்படுத்துவதை காண முடிகிறது.

## கணியம் அறக்கட்டளை

### தொலை நோக்கு – *Vision*

தமிழ் மொழி மற்றும் இனக்குழுக்கள் சார்ந்த மெய்நிகர்வளங்கள், கருவிகள் மற்றும் அறிவுத்தொகுதிகள், அனைவருக்கும் கட்டற்ற அணுக்கத்தில் கிடைக்கும் சூழலை உருவாக்குதல்.

### பணி இலக்கு – *Mission*

அறிவியல் மற்றும் சமூகப் பொருளாதார வளர்ச்சிக்கு ஒப்ப, தமிழ் மொழியின் பயன்பாடு வளர்வதை உறுதிப்படுத்துவதும், அனைத்து அறிவுத் தொகுதிகளும், வளங்களும் கட்டற்ற அணுக்கத்தில்

அனைவருக்கும் கிடைக்கச்செய்தலும்.

எமது பணிகள்

கணியம் மின்னிதழ் kaniyam.com

கணிப்பொறி சார்ந்த கட்டுரைகள், காணொளிகள், மின்னூல்களை இங்கு வெளியிடுகிறோம்.

கட்டற்ற தமிழ் நூல்கள் FreeTamilEbooks.com

இங்கு யாவரும் எங்கும் பகிரும் வகையில், கிரியேட்டிவ் காமன்ஸ் உரிமையில், தமிழ் மின்னூல்களை இலவசமாக, அனைத்துக் கருவிகளிலும் படிக்கும் வகையில் epub, mobi, A4 PDF, 6 inch PDF வடிவங்களில் வெளியிடுகிறோம்.

- தமிழுக்கான கட்டற்ற மென்பொருட்கள் உருவாக்கம்

• தமிழ் ஒலியோடைகள் உருவாக்கி வெளியிடுதல்

• விக்கி மூலத்தில் உள்ள மின்னூல்களை பகுதிநேர/முழு நேரப் பணியாளர்கள் மூலம் விரைந்து பிழை திருத்துதல்

*OpenStreetMap.org* ல் உள்ள இடம், தெரு, ஊர் பெயர்களை தமிழாக்கம் செய்தல்

மேற்கண்ட திட்டங்கள், மென்பொருட்களை உருவாக்கி செயல்படுத்த உங்கள் அனைவரின் ஆதரவும் தேவை. உங்களால் எவ்வாறேனும் பங்களிக்க இயலும் எனில் உங்கள் விவரங்களை *kaniyamfoundation@gmail.com* க்கு மின்னஞ்சல் அனுப்புங்கள்.

## வெளிப்படைத்தன்மை

கணியம் அறக்கட்டளையின் செயல்கள், திட்டங்கள், மென்பொருட்கள் யாவும்

அனைவருக்கும் பொதுவானதாகவும், முழுமையான வெளிப்படைத்தன்மையுடனும் இருக்கும். இந்த இணைப்பில் செயல்களையும், இந்த இணைப்பில் மாத அறிக்கை, வரவு செலவு விவரங்களுடனும் காணலாம்.

கணியம் அறக்கட்டளையில் உருவாக்கப்படும் மென்பொருட்கள் யாவும் கட்டற்ற மென்பொருட்களாக மூல நிரலுடன், *GNU GPL, Apache, BSD, MIT, Mozilla* ஆகிய உரிமைகளில் ஒன்றாக வெளியிடப்படும். உருவாக்கப்படும் பிற வளங்கள், புகைப்படங்கள், ஒலிக்கோப்புகள், காணொளிகள், மின்னூல்கள், கட்டுரைகள் யாவும் யாவரும் பகிரும், பயன்படுத்தும் வகையில் கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் இருக்கும்.

### நன்கொடை

உங்கள் நன்கொடைகள் தமிழுக்கான கட்டற்ற

வளங்களை உருவாக்கும் செயல்களை சிறந்த வகையில் விரைந்து செய்ய ஊக்குவிக்கும்.

பின்வரும் வங்கிக் கணக்கில் உங்கள் நன்கொடைகளை அனுப்பி, உங்கள் விவரங்களை *kaniyamfoundation@gmail.com* க்கு மின்னஞ்சல் அனுப்புங்கள்.

*Kaniyam Foundation*

*Account Number : 606 1010 100 502 79*

*Union Bank Of India*

*West Tambaram, Chennai*

*IFSC – UBIN0560618*

*Account Type : Current Account*